# தமிழ் நாடும்
# காந்தி அடிகளும்






நா. சி. இராமசுவாமி



வெளியிடுவோர் :

அகில உலக தமிழ் எழுத்தாளர் மன்றம்
பிரைவேட் லிமிடெட்
சென்னை-18.

முதல் பதிப்பு திருவள்ளுவ ஆண்டு 1996 ஆவணி
ஆகஸ்டு, 1965



**விலை : ரூபாய் மூன்று**

"ஆசிரியரின் கருத்து விளக்கங்களே இந்நூலில் தோன்றும் பெயர்களையும் சம்பவங்களையும் கட்டுப் படுத்தும்."

**காணிக்கை**

அன்னிய ஆதிக்க சட்டத் திட்டம் என்ற வலையில் சிக்கி துடிதுடித்த, மக்களின் உள்ளத்தில், ஊக்கமும் உள் வலியும் உண்மைப் பற்றும் உண்டாக்கிய, தமிழ் நாட்டின் நடை உடை பாவனை எல்லாம் தன்னுள் கொண்ட மகான் மகாத்மா காந்தி அடிகளுக்கு இந்நூல் அன்புக் காணிக்கை.

**நா. சி. இராமசுவாமி**
எழுத்தாளர்

எங்கள் வெளியீடுகள் :

| | | | |
|---|---|---|---|
| **கன்னி பூமி** | ரூ | 1 | 00 |
| **எந்தையும் தாயும்** | ரூ | 1 | 50 |
| **வள்ளுவ வளநாடு** | ரூ | 1 | 75 |
| **பொதிகை மன்றம்** | ரூ | 2 | 00 |
| **மணிவாசகப் பெருந்தகை** | ரூ | 2 | 50 |
| **சடகோபனும் செழுந்தமிழும்** | ரூ | 2 | 50 |

ஏ. கே. பிரிண்டர்ஸ் 1. ஸ்மித்ரோடு சென்னை-2.

# அன்பர்களுக்கு

" வானம் பொழியிது பூமி விளையிது.
மன்னவன் காணிக்கை ஏதுக்கடா,"
என்று அரசியல் தத்துவம் பேசுகின்றது ஒரு மனம்.

"செந்தமிழ் நாடெனும் போதினிலே
இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே"
என்று தாய் நாட்டுப் பற்றை ஊட்டுகின்றது ஒரு மனம்,

" யாம் யார்க்கும் குடி அல்லோம் நமனை
அஞ்சோம் நரகத்தில் இடர்ப்படோம்"
என்று வீறுகொண்டு எழுகின்றது ஒரு மனம்.

"வம்மின் புலவீர்காள் நாம் செல்வர்
கண்டோம் இல்லை" என்று கற்றதனால் ஆய பயனை அடைய அழைக்கின்றது ஒரு மனம்.

' அநாகரீகம், அகீர்த்திகரம் அசுவர்க்கியம்' என்று மனித வாழ்க்கையின் மாண்பினை எடுத்துக் காட்டுகின்றது ஒரு மனம்.

" தீதும் நன்றும் பிறர் தர வாரா, நோதலும் தணிதலும் அவற்றோர் அன்ன" என்று உளவியலின் உண்மையைத் தன் உள்ளே காண்கின்றது ஒரு மனம்.

" காயமது பொய்யடா, காற்றடைத்த பையடா" என்று தான் இருப்பதே பொய்யென இருள் அடைகின்றது ஒரு மனம்.

"சோற்றில் கிடக்கும் கல்லை எடுக்க முடியவில்லை சொக்கநாதன் கோயில் வரிக்கல்லை எடுக்கப்போகின்றானும்" என்று ஏளனம் செய்கின்றது ஒரு மனம். இவ்வாறு மக்களிடையே பல எண்ணவேறு பாட்டைக் காணலாம்.

"மக்களில் அரசன் நான்" என்று கண்ணன் கீதையில் வியாசதேவர் குறிப்பிடுகின்றார். சிவ பெருமான் அரசனாகத் தோன்றி பாண்டி நன் நாட்டை ஆண்டதாக திரு விளையாடல் புராணம் கூறுகின்றது.

'மக்கள் எவ்வழி அரசன் அவ்வழி' என்று தமிழகம் கண்ட பேருண்மை. ஆண்டவனின் பிரதிநிதியாக அரசன் தியாகத்தின் சின்னமாய் ஆட்சி நடத்துகின்றான். ஆனால் தெய்வீக சம்பத்தை வளர்க்க வேண்டிய அரசு அசுரசம்பத்தை வளர்க்கும் அரக்கனிடம் சிக்கிவிட்டது.

மக்கள் என்றாலும் அரசு என்றாலும், நாடு என்றாலும் ஒன்றுதான், அவை மலரும் மணமும், நிலமும் நீரும் போன்றவை. ஆனால், "இந்த நாடு தன்னுடையது, இந்த நாட்டு மக்கள் தனது குடிமக்கள்' இந்த நாட்டின் செல்வம் எல்லாம் தனது" என ஒருவன் உரிமை கொண்டாடுகின்றான், அவனோ இங்கு இல்லை. ஆறாயிரம் மைலுக்கு அப்பால் இருக்கிறான். சட்டங்களையும் திட்டங்களையும் வகுத்துச் சட்டம்' நீதி, ஒழுங்கு என ஆட்சிசெலுத்துகின்றான். இந்த மாய மனிதனை அரசன் என்று எவ்வாறு ஏற்றுக் கொள்ளமுடியும்? எதற்காக ஏற்றுக்கொள்ள வேண்டும்? இது மனித குலத்திற்கே இழிவு அல்லவா! இல்லாதது ஒன்றை இருப்பதாக நினைத்து செயல்படுவது பித்தர் நிலையே ஆகும்.

ஆனால் இந்த நாட்டில்அந்நிய ஏகாதிபத்தியம் நூற்றைம்பது ஆண்டுகளாக நிலைத்திருந்தது என்றால், இந்த நாட்டின் செல்வம் எல்லாம் கொள்ளையிடப்பட, இந் நாட்டு மக்கள் மனிதர் நிலையிலிருந்து மாக்கள் நிலைக்குத் தள்ளப்பட, காரண காரணிகளை உணரவேண்டும். இதற்கு உடந்தையாக இருந்தவர்கள் கொடியவிலங்கிற்கு உவமையாக இருப்பதைக் கண்டு கொள்ள முடியும்.

சித்தர்களும் ஞானிகளும் தோன்றிய புண்ணிய பூமி, பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சீரும் சிறப்பும் பெற்று விளங்கிய தியாக பூமி, எவ்வாறு கலிங்கத்துப் பரணியாக மாறியது ?

இந்த நாட்டின் விடுதலைப்போராட்டம் மனித வாழ்க்கையின் மாண்பினை எடுத்துக்காட்டும் தெய்வீக வழிபாடு ஆகும். இதனை தீய சக்திகள் எவ்வாறு அடக்கி ஒடுக்கி வந்தன என்பதனை, இயற்கை அறிந்தார், இறை இன்பம் பெற்றார், உணராமல் இருப்பதற்கு இல்லை; வீறு கொண்டு எழாமல் இருப்பதற்கு இல்லை.

விடுதலைப் போராட்டத்தை தலைமை தாங்கி, பல ஆண்டுகளாக பல இன்னல்களுக்கு உட்பட்டு நடத்திச் சென்ற பெருமை மகாத்மா காந்தி அடிகளையே சாரும். இந்தியசரித்திரத்தில், பொதிகை மாமலையும்பொருநைமா நதியும் போன்று பேரொளியாக திகழும் கர்ம வீரர் காந்தி அடிகளே ஆவர்.

இந்த நாட்டின் விடுதலைப் போராட்டம் எதற்காகத் தோன்றியது ? எவ்வாறு நசுக்கப்பட்டது ? என்பதனை தமிழ் உலகம் அறிய, நல்லதோர் ஆட்சி ஏற்பட, மகாத்மா காந்தி அடிகளின் அடிச்சுவட்டைப் பின் தொடர்ந்து **“தமிழ் நாடும் காந்தி அடிகளும்”** என்ற தலைப்பில் இந் நூல் எழுதப்பட்டது.

காந்தி அடிகள் மேற்கு இந்தியாவில் பிறந்தாலும் உருவத்தோற்றத்தில், நடை, உடை, பாவனைகளில், தமிழ் நாட்டில் வளர்ந்தவராகவே காட்சியளிக்கின்றார். தென் ஆப்பிரிக்காவில் தமிழர்களுக்கு இடையிலே நின்று சுதந்திரப்போராட்ட முரசை கொட்டி எழுப்பினார். பாரத நாட்டிலும் விடுதலைப் போராட்டத்திற்குத் தமிழ்த்திரு

நாட்டின் ஆதரவைப் பெரிதும் பெற்று போற்றிக் கொண் டாடப்பட்டார்.

புண்ணியமூர்த்தி மகான் மகாத்மா காந்தி அடிகள் தமிழ் நாட்டிலே தோன்றி தமிழ் நாட்டிலே வாழ்கின்றார். அவர் அழிவில்லாதவர் அழிக்க முடியாதவர். அப்பெருந் தகைக்கு நெல்லை மாநகரில் பொருநை ஆற்றங்கரை குறுக் குத் துறையில் "காந்தி துறை" அமைத்து உலகம் எல் லாம் தமிழ் நாடும் தமிழ் மொழியும் அதி உன்னத நிலையில் இருக்கச் செய்வோம். அதுவே கடனாக நமது மூச்சினில் கலந்து உற வாடட்டும். 'திருநெல்வேலி வாழும் செல்வர் தாமே' என்று ஞானசம்பந்தர் போற்றுகின்றார். இது நனவாகட்டும். அன்பர்கள், தியாகக் கனலில் தோன்றிய சுதந்திரப்போராட்டம் ஆகிய இந்நூலை, குற்றத்தைநீக்கி குணத்தைக் கொண்டு ஆதரிக்க கூப்பிய கரங்களுடன் வேண்டுகின்றோம்.

வாழ்க மகாத்மா காந்தி அடிகள், வளர்க காந்தி துறை, வளம் பெருக பாரத புண்ணிய பூமி.

திருவள்ளுவ ஆண்டு 1996,
விசுவாவசு, ஆவணி
சென்னை–18

நா. சி. இராமசுவாமி
எமக்காளர்

# தமிழ் நாடும் காந்தி அடிகளும்

## ஆட்சிமொழி

"ஜன கண மன அதிநாயக ஜெயஹே
பாரத பாக்ய விதாதா"

"பாரதத்தின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கும் தாயே நீ தான் மக்கள் எல்லோருடைய மனதிலும் ஆட்சிசெலுத்துகிறாய்" என்று பொருள்படும் இந்திய தேசீய கீதம் வான வீதியில் இனிய கானத்தில் மிதந்து வந்தது-அன்று குடிஅரசுதினம். கால தேவன் தன்சின்னம் தேசிய சின்னமாக காற்றுடன்கலந்து உறவாடுவதைகண்டுபெருமிதம்கொண்டு தன்பொன்ஒளியைஎங்கும்பரப்பிக்கொண்டிருந்தான். எங்கும் தேசியக்கொடிகளும் தோரணங்களும் காட்சி அளித்தன. மக்கள் கூட்டம் கூட்டமாக நடைபாதையில் நின்று கொண்டிருக்கின்றனர். ஜவான்கள் ஆங்காங்கே தடியுடன் நிற்கின்றனர் .மோட்டார் வண்டிகள் வருவதும் போவதுமாய் இருந்தன.

சென்னை தென் தேனாம்பேட்டை மௌன்ட்ரோடில் உதய சூரியன் கட்சியின் 'அன்பகம்' இருக்கின்றது.அதன் மேல் கருப்பு சிகப்பு இருவருணக் கொடி பறந்துகொண்டிருக்கின்றது. கட்டடத்தின் வெளியில் ஒரு விளம்பரப் பலகை இந்திமொழி பற்றிய வாசகங்கள், ஆங்கிலமொழியின் பெருமை இவற்றைப் பற்றி எழுதப்பட்டிருந்தது.

குடிஅரசு தினத்தை துக்க தினமாக கொண்டாடு கின்றது உதய சூரியன்கட்சி. இந்தியா விடுதலைஅடைந்து 17 ஆண்டுகள் கழித்து தமிழ் நாட்டில் திராவிடர்கள் என்ற கற்பனை இனத்தின் நலனுக்காக இத்துக்க தினம் கொண்டாடப்படுகின்றது. இது விருப்பு, வெறுப்பு அற்ற ஆராய்ச்சிக்கு உரியது. அத்துடன் இதனை ஊக்குவிக்கும் கட்சிகளினால் தமிழ் நாடும் தமிழ் மொழியும் தமிழர்களும் முன்னேற்றம் அடைவார்களா என்பதும் சிந்தனைக்கு உரியது.

குடிஅரசு தினத்தில் உதயசூரியன்கட்சியினர் கறுப்பு அடையாளம் அணிகின்றனர், கறுப்புக் கொடி பிடிக்கின் றனர். ஆட்சியில் உள்ள காங்கிரசுக் கட்சியினர் இதனை எதிர்க்கின்றனர்; சட்டத்தின் பெயரால் நடவடிக்கை எடுக்கின்றனர். அன்பகத்தின் முன் மௌண்ட்ரோடில் அதிகமாக தேசிய கொடிகளும் தோரணங்களும் கட்டப் பட்டிருக்கின்றன. உதய சூரியன் கட்சியைச் சேர்ந்த முக்கிய அண்ணன் தம்பிகளின் வீடுகளின்முன்னும்அதிக தோரணங்களும் தேசிய கொடிகளும் காட்சி அளிக்கின் றன. வேடிக்கை பார்க்க மக்கள்முக்கிய இடங்களில் கூட டம் கூட்டமாக நின்று கொண்டிருக்கின்றனர். போலீஸ் வண்டிகளும் ரோந்து சுற்றிக் கொண்டிருக்கின்றன.

உளக் கோளாறுகளைத் தோற்றுவிப்பதில் போராட் டம் ஓர் அடிப்படையான காரணி. போராட்டத் தின் முக்கியத்தை திட்டவட்டமாக முடிவு செய்வது உள வியலுக்கும் அறிவியலுக்கும் மிக முக்கிய காரியம் ஆகும்.

உளப்போராட்டத்திற்குக் காரணமாகும் எதிர் சக்தி களை தரும் மந்தை இயல்பு ஊக்கம் உளச்சிரழிவைத்

தோற்றுவிக்கும் களமாக அமைகின்றது. மனிதன் இடத்தில் உள்ள எண்ணிறந்த நம்பிக்கைகளும் நடத்தைகளும் மரபு, கல்வி என்பனவற்ருல் எழுகின்றன. மனிதன் இயற்கை இயல்பு ஊக்கங்களுக்கும் சூழ்நிலை மரபு என்பவற்றிற்கும் இடையில் எழுந்துள்ள போராட்டங்களில் சிக்கி உண்மை உலகை நீங்கி உருவெளித்தோற்ற உலகில் அடைக்கலம் ஆகின்ருன் மனிதன் எண்ணங்களால்ஆக்கப்பட்டவன்.அவனதுபுத்தி பூர்வமான நல் எண்ணங்களை நல்வழிப்படுத்துவது மக்களுக்காக மக்களின் அரசாங்கத்தின் தலைமையான கடமை ஆகும். இந்த உளப் போராட்டத்தின் காரணமாக நாட்டில் மக்களிடம் உளச் சிதைவு ஏற்படுவதை உண்மையான அரசாங்கம் மறப்பதற்கு இல்லை. மக்களை நன்முறையில் சிந்திக்கவைத்துநாகரிகமாகவாழவழிவகைகளை உண்டாக்கும் திட்டமே திட்டங்களின் தலைமையான திட்டம் என்பது மலைமேல் தோன்றும் ஊர் ஆகும்.

உளப்போராட்டத்தின் காரணமாக குடிஅரசு தினத்தில் எழுந்த காரணிகளை காண உதயசூரியன் கட்சியின் அன்பகத்தின் எதிரில் உள்ள நடைபாதையில் சித்தன் நின்று கொண்டிருந்தான். நூற்றுக்கணக்கான மக்கள் கூடி இருந்தனர். பல போலீஸ்காரர்கள் நின்று கொண்டிருந்தனர்.

"குடிஅரசு தினத்தை துக்கதினமாக கொண்டாடலாமா? தாய் நாட்டை இகழ்வதுபோன்றுஅல்லவா" என்று சித்தனுடன் உரையாட ஆரம்பித்தான் வேடிக்கைபார்க்க வந்த ஒருவன். சித்தனுக்கு அரசியல் பேச்சு பந்தயக் குதிரை மாதிரி ஆகும்.

“தில்லி அரசாங்கம் இன்று இந்தியை மத்திய ஆட்சி மொழியாக சட்டத்தின் மூலம் நடைமுறைக்குக் கொண்டு வருகின்றது. இதனை தமிழகத்திற்கு எடுத்துக் காட்ட இந்திவேண்டாதவர்கள் எதிர்க்கின்றனர்.

“இந்தியை தில்லியில் தானே கொண்டாடுகின்றனர் சென்னையில் இல்லையே”

பக்கத்தில் நின்று கொண்டிருந்த தன்மானம் உள்ள வன். ‘தகர டப்பா இந்தி, சென்னையில் முன்பே புகுந்து விட்டது. தபால் தந்தி நிலையம், இரயில் நிலையம் எல்லாம் இந்தி எழுத்துக்கள். இனி உன்னுடைய வீட்டுக்குள்ளும் புகுந்துவிடும்.”

“சென்னையில் புகுந்தாலும் என்னுடைய வீட்டில் புக நான் இடம் கொடுத்தால் தானே.”

“இந்தி கொடிது, இங்கிலீஷ் இனிது”

“இந்தி படித்தால் அரசாங்க உத்தியோகம் கிடைக்கும். இல்லாவிட்டால் கழுதை மேய்க்க வேண்டியது தான்”

“சலவைத் தொழிலில் நல்ல இலாபம் கிடைக்கும், ஆனல் அது ‘டோபிகானு ஆயிற்றே; கழுதைக்கும் அங்கு வேலை இல்லை”

“இந்தி வேண்டும் அல்லது வேண்டாம் என்பது பல மொழி பேசுகின்றவர்களிடையே ஏற்படும் உடன் பாடு.”

“நீ இடம் கொடுக்கா விட்டால் அதுவே உன்னை இடம் கொடுக்கச் செய்து விடும்”

“இந்தி புகுந்து விடும் என்று சொல்லிக் கொண்டு இங்கிலீஷ் புகுந்திருப்பதை மேள தாளத்துடன் வர வேற்கலாமா”

"இங்கிலீஷ் உலக மொழி, இன்றைய நிலையில் தொழில் நுணுக்க விஞ்ஞான பொருளாதார அரசியல் அறிவை துரிதமாகப் பெற வேண்டியது அவசியம். இன்றைய தேவை பல்வேறு துறைகளில் அறிவைப் பெறுவதே அல்லாது பல்வேறு மொழிகளில்புலமைபெறுவது அல்ல."

"150 ஆண்டுகள் இங்கிலீஷ் ஆட்சி நடந்ததே. என்ன அறிவைப் பெற்றுவிட்டார்கள். கோணல் புத்தி தான் வந்தது"

"இந்தியாவில் நல்ல ஆட்சி இங்கிலீஷ் மூலமே நடந்தது. இந்திய ஒற்றுமையைக் கண்டோம், உலகத்தில் தடையில்லாது எங்கும் செல்ல இங்கிலீஷ் தேவைப் படுகின்றது. உலகில் உள்ள புத்தகங்களில் 60 சத விகிதம் ஆங்கிலத்தில் வருகின்றது. ஆங்கிலம் பேசும் அமெரிக்கா பிரிட்டன் போன்ற நாடுகளுடன் பகைமை கொண்டுள்ள நாடுகள்கூட ஆங்கிலத்தை கட்டாய மாக்கி உள்ளன"

"ஆங்கிலம் வேண்டாமென்று யார் சொல்கிறார்கள்"

"ஆங்கிலம் ஒன்றுதான் இந்தியாவை ஒன்றாக நிறுத்துகிறது. ஆங்கிலம் நீங்கினால் நாடு பிளவுபடும். நம் தேசத்திற்கு அழிவு வேண்டுமா அறிவு வேண்டுமா?. அறிவு வேண்டுமென்றால் ஆங்கிலம் நீடிக்க வேண்டும்."

"இந்தி வந்துவிட்டால் இந்திவெறியர்கள் ஆங்கிலத்திற்கு இடம் கொடுக்க மாட்டார்கள். இந்தி படித்தவர்களுக்கே முதலிடம் கிடைத்து விடும்"

"நம்மை ஒற்றுமைப் படுத்தியது ஆங்கிலம்தான். மகாத்மா காந்தியையும் நேருவையும் வேறு மொழி

பேசிய தேசிய தலைவர்களையும் அறிந்து கொள்ள உதவி யது ஆங்கில மொழி. சுதந்திரப் போராட்டக் காலத்தில் ஈடுபட்டவர்களுக்கு இது தெரியும்"

"இல்லை என்று யார் சொல்கிறார்கள். ஆங்கிலத்தின் மூலம் ஆங்கில ஆட்சியை வெளியேற்ற இந்தியாவில் உள்ள பல மொழி பேசுகின்றவர் ஒன்று சேர்ந்தனர். இதில் என்ன தவறு?"

"அது போன்று இந்திய ஒற்றுமைக்கு ஆங்கிலம் மட்டும் ஏன் இருக்கக்கூடாது? இந்தி ஏன் வர வேண்டும்?"

"ஆங்கிலேயர் ஆங்கிலத்தின் மூலம் நம்மை அடிமைப் படுத்தினர். விடுதலைக்குப் பின் எதற்காக வேற்று மொழியை நாம் தேசிய மொழியாக வைத்துக் கொள்ள வேண்டும்?"

"ஆங்கிலம் வளர்ந்து ஓங்கி நிற்கின்றது. அதற்கு இணையாக இந்தியோ மற்று இந்திய மொழிகளோ இல்லை. ஆங்கிலம் இல்லையேல் நாகரீகம் இல்லை. நாட்டின் கல்வி மான்களின் மொழி ஆங்கிலம்.

"நம்ம தமிழ் மொழி இல்லையா, பத்தாவது வகுப்பு வரை தமிழில் சொல்லிக் கொடுக்கிறார்களே"

"தமிழ் நாட்டிற்குத்தான் தமிழ பயன் படும். உலகத் திற்கு எல்லாம் ஆங்கிலம் பயன் படும்"

"ஆங்கிலம் உலகத்திற்குப் பயன் பட்டால் நமக்கு என்ன? நமது தாய்மொழி தமிழ். ஆண்டவனால் அமுத மென நமக்கு அன்புடன் கொடுக்கப்பட்டது நம் தாய் தந்தையருடன் உறவினருடன், சுற்றில் உள்ளவருடன், பேசுவது, எண்ணுவது, எழுதுவது எல்லாம் தமிழ்-

அதுவே நமக்குப் போதும். ஆங்கிலத்தை விட தமிழ் பன்மடங்கு உயர்ந்தது என்றே ஆங்கிலம், பிரஞ்சு, ஜெர்மன் மொழி தெரிந்தவர், உலகம் எங்கும் சுற்றியவர். கூறுகின்றார்.

"தமிழ்நாட்டில் தமிழ் என்றால் தெலுங்கு நாட்டில் தெலுங்கு என்பர், கேரளத்தில் மலையாளம் என்பர், மைசூரில் கன்னடம் என்பர், மகாராஷ்டிரத்தில் மராத்தி என்பர், வங்காளத்தில் வங்காளி என்பர், மத்திய இந்தியாவில் இந்தி என்பர், பலமொழிகளைப் படிப்பதிலே நமது வாழ்நாள் கழிந்துவிடும். பின் எவ்வாறு அறிவைப் பெறமுடியும்? நாடு பிளவு படும்"

"அவரவர் மொழிக்கு எதிராக வேற்று மொழியை ஆட்சி மொழியாக பயன்படுத்த முடியுமா? ஒற்றுமைக்குப் பதில் வேற்றுமை அதிகரிக்கும்"

"ஒற்றுமை இதற்கு முன் ஆங்கிலத்தினால் உண்டாகவில்லையா? இனி இந்தி படித்துத்தான் உண்டாக வேண்டுமா?"

இவ்வாறு பலவாறு பேசிக் கொண்டிருந்தனர், இதில் ஆங்கில மேதையும் ஒருவன்.

சித்தன் இந்த உரையாடலை மௌனமாக கேட்டுக் கொண்டிருந்தான். பின் அந்த ஆங்கில மேதையிடம், "ஆங்கிலம் உலக மொழி என்று போற்றிக்கொண்டாடட்டும், ஆங்கிலத்தில் சிறந்த நூல்கள் எழுதட்டும் பிரிட்டனில், அமெரிக்காவில், ஆங்கிலம் ஆட்சி மொழியாகவும், கல்லூரி போதனு மொழி ஆகவும் இருக்கின்றது. தொழில்கள், வியாபார நிலையங்கள், ஆராய்ச்சிக் கழகங்கள் எல்லாம் ஆங்கிலத்தில் நடக்கின்றன. நம் நாட்டில் அவ்வாறு

இருந்தால் தானே நம் மொழி வளரும், நாம் பிறருடன் போட்டியிட்டு வெற்றியடைய முடியும்."

"இந்தியாவில் பலமொழிகள் இருக்கின்றன. பல மொழிகளை கற்பதற்குப் பதிலாக ஒரே மொழியை வைத்துக் கொண்டால் நன்மை ஏற்படும். உலகமொழியாக ஆங்கிலம் ஓங்கி நிற்கின்றது"

"இந்த நாட்டில் அடிமை ஆட்சிக்கு மூலகாரணம் ஆங்கிலம்தான். ஆங்கிலம் பயிற்சி மொழியாக உள்ள கிருஸ்துவ பள்ளிகளில் மூன்று வயதிலே சேர்க்கப்படும் மாணவ மாணவிகளுக்கு, ஆங்கிலத்தையே வீட்டிலும் வெளியிலும் பேசித்திரிகின்ற மாயா விநோத குடும்பங்களுக்கு, ஆங்கிலம் பயன்படும். இதற்காக மறைமுகமாக ஆங்கிலம் உலகமொழி என்று கொண்டாடுகின்றனர். இந்த உண்மை கிருஸ்துவ கான்வென்ட் பள்ளிகள் திறக்கும்பொழுதும் மூடும்பொழுதும் எத்தனை கார்கள் வருகின்றன, எவர் எவர் படிக்கின்றனர் என்பது தெரியவரும். இது கடந்த பதினேழு ஆண்டுகளாக இந்த நாட்டில் ஆட்சி எவ்வாறு நடந்திருக்கிறது என்பதனை நினைவு ஊட்டும். ஆங்கிலம்வேண்டாம் என்று யாரும் கூறுவதற்கு இல்லை."

"இங்கிலாந்தில் கூட மக்கள் ஆங்கிலத்துடன் ஐரோப்பிய மொழிகளையும், கிரேக்க யவன மொழிகளையும் கற்கின்றனர். உலகில் உள்ள மொழிகளை எல்லாம் கற்று அந் நாட்டின்மொழி, அரசியல்,பொருளாதார,கலாசாரங்களை ஆங்கிலேத்திலே எழுதி இருக்கின்றனர். இது போன்று நமது தாய்மொழியும் வளம்பெற வேண்டாமா? ஆங்கிலத்தில் முதல்மார்க் எடுத்தவர்களுக்கென அரசாங்க உத்தியோகம் இருக்கிறது. தாய்மொழியில்

முதன்மையாக இருக்கின்றவர்களுக்கு முதல் இடம் ஏன் கொடுக்கக்கூடாது?"

"மத்திய ஆட்சிமொழி இந்தி வருவதால் தமிழ் நாட்டிற்கு என்ன பயன்? ஆங்கிலத்தில் சிறந்தவர் அகில இந்தியா எங்கும் பலமொழி பேசுகின்றவர்களிடையே இருக்கின்றனர். அவர்களின் நிலை குன்றும். அகில இந்தியா எங்கும் இந்தியை தாய்மொழியாக உள்ளவர்கள் எல்லாத் துறையிலும் முன்னேற்றம் அடைவர்.

"இதுவரை ஆங்கிலம் மட்டும் மத்திய ஆட்சிமொழியாக இருந்தது. தமிழ் நாட்டில் தமிழ் ஆட்சிமொழியாக பெயரளவில், வருந்தத் தக்க முறையில் இருந்து வருகிறது. பாரதம் விடுதலை அடைந்து பதினேழு ஆண்டுகள் ஆகின்றன. ஆங்கிலத்தினுல் நாடு முன்னேற்றம் அடைந்து விடவில்லை. விடுதலைக்கு முன்னும் ஆங்கிலத்தில் பட்டம் பெற்று மேதை என்று அழைக்கப்படுபவர் நாட்டைக் காட்டிக் கொடுத்தனர், அடிமை ஆட்சியை நிலை நாட்டினர். மூல இயந்திரங்கள் எல்லாம் வெளிநாட்டிலிருந்தே இறக்குமதி செய்யப்பட்டன. மக்களின் உழைப்பையும் மூலப்பொருள்களையும், குறைந்த செலவில் பெற்றுக் கொள்ளையடித்து வந்தனர். இதில் பங்கு போட்டனர் ஆங்கில மேதைகள். அன்றும் ஆங்கிலத்தினுல் நாடு முன்னேற்றம் அடையவில்லை. ஆனுல் இந் நாட்டை அந்நியனுக்குக் காட்டிக் கொடுத்து அடிமையாக்கிய ஆங்கில மேதைகளுக்குச் செல்வம் வளர்பிறைச் சந்திரன் போன்று இன்றும் பெருகி வருகிறது. நம் நாட்டு மக்கள் எல்லோருக்கும் சம சந்தர்ப்பமும் சம வாய்ப்பும் கிடைக்கச் செய்ய வேண்டுமானுல் தாய்மொழி ஒன்றினுல்தான் முடியும்."

"குடி அரசு தினத்தில் ஏன் இந்தி மட்டும் ஆட்சி மொழியாக வரவேண்டும். பதினன்கு தேசியமொழிகளை யும் ஆட்சிமொழிகளாக்கவேண்டாமா? வடவர் ஆதிக்கத் தைநிலை நாட்ட ஏற்பட்ட சூது அல்லவா."

"ஆங்கிலத்துடன் இந்தியும் ஆட்சி மொழியாகின் றது, இப் புனித நாளில். இது வரவேற்கத் தக்கது. இது தவறு என்று எவ்வாறு கூற முடியும்? எல்லா மொழிகளிலும் ஆட்சி நடத்த இது அடிகோலிடுகின்றது அல்லவா."

ஆங்கில மேதைக்கு சித்தனின் பதில் பிடிக்கவில்லை, "என்ன சொன்னுலும் எங்கே தெரியப்போகின்றது இந்த மரமண்டைகளுக்கு" என ஆங்கிலத்தில் கூறிக்கொண்டு அந்த இடத்தை விட்டு போதை உள்ளத்துடன் அகன் ருன்.

சித்தனும் ஓர் சிறந்த ஆங்கில மேதை. ஆங்கில இலக்கியங்கள் எல்லாவற்றையும் படித்திருக்கிருன். தெய்வத் தமிழ் இலக்கியங்களுடன் அவற்றை உரைத்துப் பார்க்கும்பொழுது தமிழ் பத்தரைமாத்து தங்கமாக, ஆங் கிலம் பொன்னும் செம்பும்கலந்த நாணயமாக, இருப்பதை கண்டான். இதனுல் தெய்வத் தமிழின் பெருமையைப் போற்றிக் கொண்டாடுகின்ருன். ஆனுல் ஆங்கில மேதை யாகிய மற்றவன் கண்ணேட்டம் இல்லா நடைப்பிணமாக தோன்றுகின்ருன்.

குடி அரசு தினத்தை 'துக்க தினம்' என்று கொண் டாடுவது அண்பும் பண்பும், அறிவும் ஆற்றலும் கொண்ட வர்களின் செய்கை என்று சொல்லுவதற்கு இல்லை. துக்க தினத்தை ஒட்டி இந்தி வேண்டாம் என்று கூறும் கட்சி களில் சிலர் கைது செய்யப்பட்டனர்.

" ஆங்கிலேயர்கள் மோசம்செய்தது இல்லை. ஏமாற்றி யது இல்லை. ஏமாற்றுகிற மோசடி முறையை ஆங்கிலேய ஆட்சி கைக் கொள்ளவில்லை. காங்கிரசு ஆட்சியில் ஏமாற் றுவதையே தொழிலாகக் கொண்டிருக்கிறார்கள்" என நேர்மையற்ற முறையில் பேசித்திரியும், காங்கிரசு கட்சி யினால் முன்னுக்கு வந்து உயர் பதவி வகித்த ஒருவர் காங்கிரசை ஒழித்துகட்ட ஒரு கட்சியை நடத்திவருகிறார். அவரையும் அவரது கையாட்களையும் ஆட்சியில் உள்ளவர் கள் கைது செய்யவில்லை. இது நேர்மையானதுதானா என்று கேட்கலாம். ஆனால் இவர் குடியரசு தினத்தை துக்க தினமாக கொண்டாடவில்லை. கறுப்புத் துணி அணிந்துகொள்ளவில்லை. இதனால்தான் ஆட்சியாளர்கள் இவர்களை சும்மா விட்டுவிட்டனர்போலும். பாதுகாப்புச் சட்டம் இல்லையா என்று கேட்கலாம். பாதுகாப்புச் சட்டபடி மதிப்புக்குரிய தமிழ் பேராசிரியர்களை கைது செய்தனர். இதனை தட்டிக் கேட்க ஒருவரும் இல்லை. ஆனால் ஒருவரை கைது செய்வதினாலோ, அல்லது கைது செய்யாது விட்டுவிடுவதினாலோ எந்த இயக்கமும் அடங்கி ஒடுங்கி விடுவதில்லை. தமிழ்ப் பேராசிரியர்களை கைது செய்வதும் தமிழ் அன்னைக்கு விலங்கு பூட்டுவதும் ஒன்றுதான்.

இந்தி ஆட்சி மொழியை எதிர்த்து மாணவர்கள் கிளர்ச்சி செய்தனர். பல நாட்களாக கல்லூரிகளும் கலா சாலைகளும் மூடிக் கிடந்தன. தமிழ் நாடு எங்கும் இலட்சக்கணக்கான மாணவ மாணவிகள் பள்ளிகளுக்குச் செல்லாது அவதியுற்றனர். அவர்களின் பெற்றோர்களுக்கு வெளியில் சென்ற பிள்ளைகள் மீண்டும் வீட்டுக்கு வருவார் களா, என்ற கவலை, தமிழ் நாட்டுச் சரித்திரத்தில் இடம் பெற வேண்டிய முக்கிய சம்பவம் ஆகும்.

மாணவர்களின் கிளர்ச்சியைத் தொடர்ந்து துப்பாக் கிப் பிரயோகங்களும் நடந்தன நூற்றுக் கணக்கானவர் கள் மாண்டனர்; ஆயிரக் கணக்கானவர்கள் காயம்

அடைந்தனர். பல இலட்ச ரூபாய்மதிப்புள்ள சொத்துக்கள் நாசமாயின. சில இடங்களில் இராணுவம் அழைக்கப்பட்டது. சிலர் தானே தீயிட்டு இறந்தனர்.

கல்வித் துறையில் முதன்மையாக பல ஆண்டுகளாக இருந்து வரும் பொறுப்பு வாய்ந்தவர் கூறுவதைக்கேளுங்கள்:

"ஐம்பது ஆண்டுகளுக்கு மேல் கல்வித் துறையில் எனக்கு அனுபவம் உண்டு. குறிப்பாக கடந்த பதினெட்டாண்டுகளாக ராஜ்ய மேல்சபையில் அங்கம் வகிக்கின்றேன். இவ்வளவு ஆண்டுகளிலும் இம்மாதிரியான சம்பவம் ஏற்பட்டதில்லை. மாணவர்களிடையே ஏற்பட்ட எழுச்சி திடீரென ஏற்பட்டது. அது தானுக ஏற்பட்ட எழுச்சி அல்ல என்று சொல்வது சரி அல்ல. தங்களுடைய நலனுக்கும் எதிர்கால நலனுக்கும் பாதகமான காரியம் நடக்கிறது என்ற உணர்ச்சி மாணவர்களிடையே ஏற்பட்டது. அது சரியாக இருக்கலாம். கல்லூரிகளிலும் மாணவர் இல்லங்களிலும் போலீசார் எடுக்கப்பட்ட சில நடவடிக்கை உண்மை என்றே பொறுப்பு வாய்ந்த கல்லூரித் தலைவர்கள் சொல்லுகின்றனர். இச் சம்பவங்களை லேசாக எண்ணி ஒதுக்கிவிட முடியாது" என்று குறிப்பிடுகின்றார்.

கல்லூரிகளுக்குள்ளும் மாணவர் விடுதிகளுக்குள்ளும் போலீஸார் புகுந்தது, அடித்தது, கண்ணீர் புகை குண்டு வீசியது கண்டிக்கத்தக்கது என்று பொறுப்புவாய்ந்தவர்களே கூறுகின்றனர். மாணவர்களின் கிளர்ச்சியை ஒடுக்க ஆட்சியில் உள்ளவர்கள் இத்தகைய முறையைக் கையாண்டது, இராணுவத்தை நிறுத்தியது ஒழுங்கானது தானு என்பது விருப்பு வெறுப்பு அற்ற ஆராய்ச்சிக்கு உரியது.

மொழிவாரி ராஜ்யங்கள் பிரிக்கப்பட்டதும், அந்தந்த பிராந்தியமொழிகளுக்கு முதல் இடம் கொடுக்கத் தவறி

யதால் ஏற்பட்ட சூழ்நிலையே இப்போராட்டத்திற்கு முக்கிய காரணம் ஆகும். உயர்நிலைப் பள்ளிப்படிப்பு முடியும் வரை தாய்மொழியில் கற்றுக்கொடுக்க முடிவுசெய்து விட்டு, கல்லூரி போதனைமொழியும், போட்டி பரீட்சை மொழியும் ஆட்சிமொழியும் ஆங்கிலத்திலோ அல்லது இந்தியிலோ இருக்க விரும்புகின்றவர்கள் நகைக்கத்தக்க நாகரீகம் வேண்டுபவர் ஆவர். "தேன்மதுரத் தமிழ் ஓசை தெருவெல்லாம் செழிக்கச் செய்வீர்" என்ற தேசியத்தின் மூலமந்திரத்தை மறந்தவர் ஆவர்.

"செய் தக்க அல்ல செயக்கெடும்
செய் தக்க செய்யாமை யானும் கெடும்"

தியாகத்தினல் வளர்ந்த காங்கிரசை ஒரு சிலர் தங்களுடைய சொந்த விருப்புக்கும் வெறுப்புக்கும் ஏற்றவகையில் நடத்திச் செல்வது கொடிய பாதகம் ஆகும். நாட்டில் துப்பாக்கிச் சூடுகளும் அமளியும் நடக்கும் பொழுது காங்கிரசு தலைவராக இருப்பவர் தமிழ் நாட்டை சேர்ந்தவராக இருந்தும் தேர்தல் போராட்டத்திற்காக இதர ராஜ்யங்களில் சுற்றுப் பிரயாணம் செய்ததும், அதன்பின் காங்கிரசு தேர்தல்நிதியாக இருபது இலட்சம் ரூபாய் திரட்டுவதில் ஈடுபட்டிருப்பதும் இந்நேரத்தில் வாசகர்கள் மறப்பதற்கு இல்லை. அத்துடன் மந்திரிகளின் பொறுப்பு வாய்ந்த தலைவர்களின், பேச்சுக்களையும் நடுநிலையாளரிடம் விட்டால்" தேரான் தெளிவும், தெளிந்தான் கண் ஐயுறவும் தீரா இடும்பை தரும்" என்பது நன்கு தெரியவரும்.

காங்கிரசானது கட்சிகளுக்கெல்லாம்தலைமையானது. அது எல்லாக் கட்சிகளின் உயர்ந்த இலட்சியங்களையும் தன்னுள் கொண்டு விராட ரூபத்தில் பிரதிபலிக்கின்றது. இதனை உணர்ந்து மக்களின் அன்பையும் ஆதரவையும் பெற்றுபொறுப்பில் உள்ளவர்கள் ஆட்சியை நடத்த முன் வரவேண்டும். எல்லாக் கட்சிகளுக்கும் மந்திரிசபையில்

நியாயமான முறையில் பணிஆற்ற வழிவகைகள் செய்யப் பட வேண்டும். இதுவே ஜனநாயக சோசலிசம் ஆகும் இதனுல் கட்சி ஆதிக்கம்போய் நல்லதோர் நிர்வாகம் ஏற்பட வழிபிறக்கின்றது. எல்லாகட்சிகளுக்கும் பொறுப் பும் கடமையும் அதிகரிக்கின்றது. மொத்த மக்கள் எண் ணிக்கைக்குத் தக்கபடி மந்திரிசபையில் எல்லா கடசித் தலைவர்களுக்கும் இடம் கிடைப்பதால் தேர்தல் பித்த லாட்டங்களும், கட்சி வெறியும் கானல்நீர் போன்று ஆய் விடுகின்றது.

மகாத்மா காந்தி அடிகள் ஹரிஜனில் 'உஷார்' என்ற தலைப்பில் எழுதுகின்ருர்.

"நம் நாட்டை கைப்பற்றி ஆண்டு வந்த ஆங்கிலேயர் களை நாம் எப்படி விரட்டினேமோ அதேபோல நம்முடைய கலாசாரத்துறையைக் கைப்பற்றி இருக்கும் ஆங்கிலத்தை யும் நாம் வெளியேற்ற வேண்டும் என்பது என்னுடைய வேண்டுகோள். இந்த விவாதத்தில நாம் நாட்களை செல விடுவது முற்றிலும் அனுவசியமாகும். அப்படிச் செய்வ தால் ஆங்கிலம் நுழைந்து இந்தியாவுக்கு நிரந்தரமாக மானக்கேட்டை உண்டுபண்ணும். அந்தந்த மாகாணத் தின் எல்லா இலாக்காகளிலும் அந்தந்த மாகாண மொழி யே உபயோகிக்கப்பட வேண்டும். இது உடனடியாக அமுலுக்கு வந்தால் அதைத் தொடர்ந்து எல்லா மாகா ணங்களுக்கும் பொதுவான இந்துஸ்தானி விரைவில் அமுலுக்கு வந்துவிடும். ஆங்கிலமொழி மிகவும் வளம் பொருந்தியது. வர்த்தகத் துறையிலும் ராஜ்யத்துறையி லும் சர்வதேச பொதுமொழியாக ஆங்கிலமொழி விளங்கு கின்றது. அது என்றென்றும் இருக்கும்."

தமிழ்நாட்டிற்குத் தமிழும். அகில இந்தியாவிற்கு இந்துஸ்தானியும், அகில உலகிற்கு ஆங்கிலமும், பூவும் மணமும் போன்று தோன்றுவதை காந்தி அடிகள் சுட்டிக் காட்டுகின்ருர். ஆனுல் மத்திய மாநில மந்திரிசபையும்

அகில இந்திய காங்கிரசும் காந்தி அடிகளின் ஞாபகார்த்த மாகச் செய்ய வேண்டிய தலைமையான கடமைகளைச் செய்ய மறந்து விட்டன. இதற்குப் பதில் அண்ணலின் பிறந்ததினத்தையும் இறந்த தினத்தையும் கொண்டாடு வதில் கவனம் செலுத்துகின்றன! பதவிமோகமும் புகழும் பேராசையும் தான் இதற்கு மூலகாரணம். தமிழகம் காந்தி அடிகளின் பொன்னுரையை உணரத் தவறின் பதினெட் டாம் நூற்றாண்டுகம்பெனி ஆட்சியே மீண்டும் தோன்றும் என்பது மலை இலக்கு.

காந்தி அடிகள் ஹரிஜனில் கடைசியாக எழுதிய இறுதி கட்டுரை 1948–ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் முதல் தேதியில் வெளிவந்தது. இதனை அண்ணலின் மரணச் செய்தி என்றே கூற வேண்டும் ஏனெனில் 1948 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முப்பதாம் தேதி இத்தியாக தீபம் மறைந்து விட்டது, இதோ படியுங்கள் :—

"அரசியல் கட்சிகளில் இந்திய தேசிய காங்கிரசு மிகவும் பழமையானது. அகிம்சை வழியில் பற்பல போராட்டங்களை நடத்தி இருக்கிறது. இதனை அழிய விடக்கூடாது. இது இந்நாட்டுடன் ஒன்றி இந்நாட்டுடன் அழிய வேண்டும். அதி உன்னத அடிப்படையில் தோன் றிய கட்சி உண்மையில் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமாக வளர்ந்துகொண்டே இருக்கின்றது. அர சியல் விடுதலையை காங்கிரசு பெற்றது. ஆனால் பொருளா தார விடுதலை, சமுதாய சன்மார்க்க விடுதலையைப் பெற வில்லை. இவைகள் அரசியல் சுதந்திரத்தைவிட மிகவும் கடினமானவை. இவை திட்டமிட்டு நிறைவேற்றப்பட வேண்டியவைகள். வெறும் பேச்சு அளவிலோ, எழுத் தளவிலோ அல்ல.

திட்டமானது கோடிக்கணக்கான மக்களின் உள்ளத் தில் பிரதிபலிக்க வேண்டும். காங்கிரசு மகாசபை அடி யார்க்கு அடியாராய், திருத்தொண்டராய் திகழவேண்டும்

பதவிவெறி பிடித்து அலைந்தால் ஒருநன் நாள் பொழுதில் அது திடீரென்று மறைந்து விடும்'' என்று குறிப்பிடுகின்றார்.

நாட்டுப்பற்றும் நன்மொழிப்பற்றும் கொண்டவர்கள் இப்பொன்மொழிகளை மறைப்பதற்கு இல்லை, மறப்பதற்கும் இல்லை. இவை இதயவீணையின் நரம்பில் முறுக்கேற்றப்பட்டு இன் ஒலியை எழுப்பக் கூடியவை.

"எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு."
"ஆற்றின் வருந்தா வருத்தம் பலர் நின்று
போற்றினும் பொத்துப் படும்."

எந்தக் காரியமும் காலமும் இடமும் அறிந்து செய்ய வேண்டும். அகில இந்தியா என்ற கண்ணோட்டத்தில் வட்டார அபிவிருத்தியை மேற்கொள்வது,

"நுனிக்கொம்பர் ஏறினல் அ..திறந்தூக்கின்
உயிர்க்கு இறுதி ஆகிவிடும்."

என்ற நிலையில் தான் முடியும். வட்டார அபிவிருத்தி வட்டார கண்ணோட்டத்தில் பார்க்க வேண்டுமே அல்லாது ராஜ்ய கண்ணோட்டத்திலாவது, அகில இந்திய கண்ணோட்டத்திலாவது செயலில் ஈடுபடுவது,

"எண்ணியார் எண்ணம் இழப்பர் இடன் அறிந்து
துன்னியார் துன்னிச் செயின்."
"நெடும்புனலுள் வெல்லும்முதலை அடும்புனலின்
நீங்கின் வெல்லும் அதனைப் பிற.'

என்றபடி நல்லதோர் பயனை அடைய முடியாது.

அரசியல் கட்சிகள் எல்லாம் உயர்ந்த பண்பட்ட நிலையில் இயங்க வேண்டும். காங்கிரசை குழிதோண்டிப் புதைத்துவிட்டு தாங்கள் ஆட்சியைக் கைப்பற்றி விட்

டால், 'நாட்டில் பால் பொங்கி வழியும்' என்று கூறுவது வெறும்பித்தலாட்டமே அல்லாது வேறு ஒன்றும் இல்லை. காங்கிரசுமகாசபைக்கு காந்தி அடிகள் கூறும் கட்டளைகள் அரசியல் கட்சிகள் எல்லாவற்றிற்கும் உரியது.

கடந்த ஐம்பது ஆண்டுகளாக இந்நாட்டில் தோன்றிய கட்சிகளேயும் அவற்றின் தலைவர்களேயும், அவை செயல்படும் துறைகளும். அவற்றால் நாட்டிற்கும் நாட்டு மக்களுக்கும் ஏற்பட்ட நன்மை தீமைகளையும் விருப்புவெறுப்பு அற்று இன்றைய நிலையில் ஆராய்ச்சி செய்ய வேண்டியிருக்கிறது. ஏனெனில் நாட்டில் மக்களிடையே உளப் போராட்டத்தை இவையே உண்டாக்குகின்றன. இக் கட்சிகளால் இனி இந்நாட்டிற்கு நன்மை உண்டாகுமா, முன்னேற்றம் ஏற்படுமா அல்லது நாட்டில் உள்நாட்டுக் கலவரத்தை உண்டு பண்ணுமா, அல்லது நல்லதோர் சமுதாய ஆட்சி ஏற்பட முட்டுக்கட்டையாக இருக்கின்றனவா, முதலியன நன்கு தெரியவரும். இதனல் இச் கட்சிகளை நன்முறையில் திருத்தி அமைக்கவோ அல்லது இவைகளை பாதுகாப்புச் சட்டப்படி தடுக்கவோ முடிகின்றது.

"தீயவை தீயபயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப்படும்."

# 2

# பாரதத்தின் சுகதுக்கம்

"படர்ந்த கானகம் திரிந்து மீண்டு அன்புடன்
பணிந்த பஞ்சவர்க்காக
கடந்த ஞானியர் கடவுளர் காண்கலாக்கழல்
இணை சிவப்பு ஏற

தொடர்ந்த நான் மறையின் செலப்பன்
வகத்துவசன் மாநகரத்தூது
நடந்த நாயகன் கருமுகில் வண்ணம் என்
நயனம்விட்டு அகலாதே.''

பாரதநாட்டின் தேசிய கீதம் தெய்வத்தன்மை பெற்றது. இறை இன்பம் பெற்றது: தியாகத்தின் சின்னமாக விளங்குகின்றது. இதனைப் பிரதிபலிக்க வேண்டியது இந்திய குடிஅரசு நிர்வாக ஆட்சி. இதனை சற்று கவனிப்போம்.

பாரதம் விடுதலை அடைந்தபின் அரசாங்க நிர்வாகத்தை இருவகையாகப் பிரிக்கலாம். ஒன்று சட்டசபை, மற்றொன்று மந்திரிசபை. இன்று அரசன் இல்லை. சக்கரவர்த்தி இல்லை, குறுநில மன்னர்கள் இல்லை, பெருநில கிழார் இல்லை.

21 வயது வந்தவர்களுக்கு ஓட்டுஉரிமை உண்டு. மத்திய மாநில சட்டசபைகளுக்கு மக்களின் வாக்கை அதிகம் பெற்றவர் வேட்பாளராய்ச் செல்கின்றனர். சட்டசபை அங்கத்தினர்கள் அரசாங்கத்தை நடத்த மந்திரிசபையைத் தேர்ந்து எடுக்கின்றனர். மந்திரிசபையைத் தான் பெரும்பாலும் அரசாங்கம் என்று கருதப்படுகின்றது. ஏனெனில் நாட்டில் அரசாங்கம் என்ற பெயரில் நடத்துகின்றவர்கள் மந்திரிகள். ஜனாதிபதிகளும். கவர்னர்களும், ராஜபிரமுகர்களும் ஒரு குறிப்பிட்ட காரியத்திற்காகவே ஏற்பட்டிருக்கின்றனர். நாட்டில் சட்டசபை இல்லையேல் மந்திரிசபையும் இல்லை. மந்திரிகள் இல்லை என்றால் அரசாங்மே இல்லை. மந்திரிகள் சட்டசபையின் மூலம் நிர்வாகத்திற்கு வேண்டிய சட்டங்களையும் திட்டங்களையும் வரவுசெலவுத் திட்டங்களையும் நிறைவேற்றுகின்றனர்.

மந்திரிகள் நீதியும் நேர்மையும் உள்ளவராய் மறந்தும் பிறர்க்குக் கேடு நினைக்காதவராய் இருக்க வேண்டும்.

இவர்கள் நடுநிலை பிறழாது நாட்டில் நிர்வாகம் ஒழுங்காக வும் மக்களுக்குக் கூடுதலான நன்மை ஏற்படுவதற்கும் தங்கள் அதிகாரங்களை செயலாளர்களுக்கும் நெறியாளர் களுக்கும் மற்றவர்களுக்கும் வழங்குகின்றனர். நீதி மன்றங் களும் இவ்வாறே அமைந்திருக்கின்றன. நீதிமன்றங்கள் சட்டத்தை நிலைநாட்டவே தோன்றியவை.

இன்றைய நிலையில் இந்த அரசாங்க உயர்அதிகாரி களும், நீதிபதிகளும் பெரும்பாலும் அன்னிய ஆதிக்கத் தில் இந்த நாட்டில் அடிமை ஆட்சியை நிலைநாட்டியவர் கள். இவர்கள் எல்லோரும் மறந்தும் பிறர்க்குக் கேடு நினைக்கா உயர்ந்தஉள்ளம் படைத்தவர்கள் என்று சொல் வதற்கு இல்லை. இவர்களில் சிலர் நல்லவர்களாக இருக்க லாம். ஆனால் சட்டம், ஒழுங்கு, நீதி என்பவை வாதங்க ளால் நிலைநாட்டப்படுவதால் கீழ்நிலைக்குச் செல்ல வேண் டிய வழிவகைகளும் தோன்றி விடுகின்றன.

பெரும்பாலும் அரசாங்க உத்தியோகத்தை நாடிச் செல்கின்றவர்கள் நாட்டுப்பற்றின் காரணத்தால் அல்ல. போட்டிப் பரீட்சை நடத்துகின்றனர். அதில் வெற்றி பெற்றவர்களுக்கு உத்தியோகம் கிடைக்கின்றது. நிரந்தர மான உத்தியோகம், உயர்பதவி, நல்ல ஊதியம், நல்ல மதிப்பு, சுகமாக வாழலாம் என்ற காரணத்தினாலே செல் கின்றனர். இவர்கள் உயர்ந்தவர்கள் என்றோ அல்லது சிறந்தவர்கள் என்றோ கூறுவதற்கு இல்லை. இவர்களை நன்முறையில் கண்காணிக்கா விட்டால் நாடு பாழடைந்து விடும், நாட்டு மக்கள் கொத்தடிமையாய் விடுவர்.

இன்று நாட்டில் ஜனநாயகம் என்பது கட்சி ஆதிக்க வெறிபிடித்தவர்களிடத்தில் சிக்கி தன்நிலைகுன்றிவிட்டது. தனிப்பட்ட மனிதன் தனது நியாயமான உரிமைக்காகப் போராட வேண்டியநிலை ஏற்பட்டு விட்டது எல்லோருக் கும் சமவாய்ப்பும் சமசந்தர்ப்பமும் கிடைக்கச் செய்ய வில்லை. எல்லோருக்கும் உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க இடமும், போதுமான கல்வி அறிவும்

அவரவர் அறிவிற்கும் ஆற்றலுக்கும் ஏற்றவகையில் ஊதிய மும் தற்பாதுகாப்பும் கிடைக்கத்தக்க நடவடிக்கைகள் எடுக்க வில்லை. இந்தியாவில் அரசியல் உரிமை சாசனம் பெயர் அளவில்தான் காட்சி அளிக்கின்றது சட்டங்களும் திட்டங்களும் இதனை நிலைநாட்டத் தவறி விட்டன.

ஜனநாயக சோசலிசம், ஐந்தாண்டு திட்டம் மக்களைப் பகல் கனவிற்கு அழைத்துச் செல்கின்றன. இவை உண்மையில் பெரும் ஏமாற்றத்தையே உண்டு பண்ணு கின்றன. சமுதாயத்தில் ஒருவன் உயர்ந்த நிலையிலும் மற்றொருவன் மிகுந்த தாழ்ந்த நிலையிலும் இருப்பது விதி யின் பயன் அல்ல. அரசாங்கம் நன்முறையில் இயங்காத தால் ஏற்பட்ட நிலையாகும். விதி என்றாலும் சட்டம் என்றாலும் ஒன்றுதான். சட்டங்களையும் விதிகளையும் வகுத்து அவை நன்முறையில் இயங்கச் செய்யவேண்டும்

பண்டித ஜவகர்லால் நேரு முப்பது ஆண்டுகளுக்கு முன் 'சோவியத் ருஷ்யா' என்ற நூலை எழுதினார். அதில் அவர் நேரில் கண்டவற்றைக் குறிப்பிடுகின்றார். 1914-ஆம் ஆண்டு முதலாவது உலக யுத்தம் ஏற்பட்டது. இதனை அடுத்து ருஷ்ய புரட்சியும் ஏற்பட்டு சோஷலிச சமுதா யத்தை அமைத்து பதினைந்து ஆண்டுகளுக்குமேல் செல்ல வில்லை. இந்த ஆண்டுகளுக்குள் அதி சீதள பிரதேசத்தில் உள்ள சோவியத் ருஷ்யா எவ்வாறு முன்னேற்றம் அடைந் தது. அதைவிட பன் மடங்கு இயற்கை அமைப்பும் சீதோ ஷண நிலையும் உள்ள பாரத புண்ணிய பூமி பண்டித ஜவ கர்லால் நேருவின் தலைமையில் ஆட்சி நடந்து இருந்தும் ஆரம்பக் கட்டத்திலே இருந்து வருவது ஏன்? மேலும் 1914ஆம் ஆண்டைவிட நவீன விஞ்ஞானம் அதி அற்புத மாக முன்னேற்றம் அடைந்திருக்கிறது. இவற்றை எல் லாம் மறந்து விடுவதற்கு இல்லை. நம் நாட்டில் அரசியல் பொருளாதார, சமுதாய, கலாச்சாரங்கள் நன்முறையில் விஞ்ஞானத்தை ஒட்டி அமையவில்லை என்பது குன்றின் மீது வைத்த விளக்கு.

இன்று நம் நாட்டில் ஆட்சியில் உள்ளவர்கள் சட்டம் ஒழுங்கு பாதுகாப்பு என்ற முறையில் நாட்டுப் பணத்தை வீண் விரயம் செய்யலாம், யாரையும் கைது செய்து காவலில் விசாரணை இல்லாது வைக்கலாம். அன்னாரின் உடைமையைச் சூறை ஆடலாம். பிரிட்டிஷ் ஆட்சியே புதிய ரூபத்தில் அமைந்திருக்கின்றது என்றுகூட சொல்ல வழி இருக்கின்றது. இதற்காக காங்கிரசு மகாசபை ஏற்படவில்லை. காந்திஅடிகள் முதலிய தியாகிகள் தாங்கொணாத் துயரம் அடையவில்லை.

அகிம்சை என்றுகூறி நாட்டில் துப்பாக்கிகளுக்கு மத்தியில் ஆடம்பரமாக நடந்து செல்லும் ஜனாதிபதிகளையும் மந்திரிகளையும், அதிகாரிகளையும் சாங்கிரசு கட்சித் தலைவர்களையும் காணலாம். மக்களுக்கு ஓட்டு உரிமை உண்டு. தங்களது அதிகாரத்தைவேட்பாளருக்கு அளிக்கின்றனர். ஆனால் வேட்பாளர்கள் மக்களுக்காக மக்களின் வாக்கைப் பெற்றுச் சட்டசபைக்குச் செல்கின்றனர் என்பது உண்மையானால் மக்களின் உரிமையை நிலைநாட்ட வேண்டும். மக்கள் அடிமை நாட்டில் இருந்தவாறே இன்றும் இருந்து வருகின்றனர். மக்கள் என்றாலும் தனிப்பட்ட மனிதர் என்றாலும் ஒன்றுதான்.

தலைவன் ஒருவன் நானும் தன்னைச் சேர்ந்த கட்சியும் மக்களுக்காக சேவை செய்கின்றதாகக் கூறி மக்களின் வாக்கைப் பெற்று சட்டசபைக்குத் தேர்ந்து எடுக்கப்படுகின்றான். பின் அரசாங்கம் என்ற பெயரில் மக்கள் எங்களுக்கு கீழ்பட்டு நடக்கவேண்டும் என்று கூறுவானாகில் அவனையும் அவனது கட்சியையும் ஆதிக்க வெறி பிடித்தவர்கள் என்றுதான் கூறவேண்டும். இன்று நாட்டில் பல கட்சிகள் இயங்கும் முறையும் அவை பணம் திரட்டும், முறையும் அவை செலவிடப்படும் வழிவகைகளையும் கவனித்தால் கட்சியின் பெயரால் மக்களை ஏமாற்றி நாட்டில் ஆதிக்கத்தை கைப்பற்றலாம், என்ற பேராசை தெரிய வரும்.

கட்சி வெறியானதுமத வெறியிலும் கொடியது. அந்தக் காலத்தில் மதத்தின்பால், சாதியின்பால் இனத்தின்பால் பல கொள்ளைகளும் கொலைகளும் நடந்தன. இந்தக் காலத்திலும்கூட பாகிஸ்தான் உருவானது எப்படி? மத வெறியினால் ஏற்பட்டது. முகமதிய மதத்தின் பெயரால் கொலையும் கொள்ளையும் நடக்கவில்லையா? இன்று பாரத மண்ணில் சீனாவும் பாகிஸ்தானும் உரிமை கொண்டாடி பயங்கர ஆயுதங்களைத் தாங்கி போரிடுகின்றன. இவை எல்லாம் மதத்தின் பெயரால் நீதியின் பெயரால் நடக்கின்றது என்று எவ்வாறு கூறமுடியும்? படைபலத்தால் எந்தக் காரியமும் செய்துவிடலாம் என்று நினைக்கின்றவர்கள் மிகவும் மட்டரகமான மிருகங்களுக்கு ஒப்பானவர். இவர்களைச் சுலபத்தில் அடக்கி ஒடுக்கமுடியும், பஞ்சபூதங்களின் தத்துவமும் அவை இயங்கும் முறையும் அறிந்த விஞ்ஞானிகள் இதனை உணர்வர்.

அரசியல் கட்சிகள் எவ்வாறு இயங்குகின்றன? மக்களுக்கு இதைச் செய்கிறோம், அதைச் செய்கிறோம். இதனால் மக்கள் எல்லோரும் நன்மை அடைவர் என்று கூறி திட்டம் போட்டு வேலைச் செய்கின்றன. அரசியல் அதிகாரத்தைப் பெற தங்கள் கொள்கைகளைப் பரப்ப மக்களிடம் போதையை உண்டாக்குகின்றன. மக்கள் இவர்களின் மாய உலகத்திற்கு மயங்கி ஆதரவு தந்து பின் பெரிதும் ஏமாறுகின்றனர்.

மக்களின் சுபிட்சத்திற்கு நல்லதோர் நிர்வாகம் ஏற்பட வேண்டும். நாட்டில் இயற்கைச் செல்வமும் நன்முறையில் தேங்கிக் கிடக்காது இயங்கவேண்டும். இதனை கட்சிகாரர்கள் செய்து முடிக்கும் காரியம் அல்ல. கட்சி என்பது கொள்கை வேற்றுமையால் ஏற்பட்டது. இதனால் நன்மை பொதுமக்களுக்கு இல்லை. ஜனநாயக சோஷலிசம் எல்லாகட்சிகளுக்கும்உரியது. இதனைஅடையகட்சிக்காரர்கள் தங்களது கொள்கைகளையும் பிற கட்சிகளின்செய்கைகளையும் குறிப்பிடுகின்றனர். இது ஒருமாயாவாதம் ஆகும்

ஜனநாயக சோஷலிசத்தில் குறைந்தபட்ச ஊதியமும் அதிகபட்ச ஊதியமும் நிர்ணயிக்கப்படுகின்றது. எல்லோருக்கும் வேலை கிடைக்கின்றது. சோம்பேறியாகவோ பிச்சை எடுக்கவோ யாரும் இருப்பதற்கு இல்லை. வயோதிகர்களுக்கும் வேலை செய்ய முடியாதவர்களுக்கும், நோயாளிகளுக்கும் வாழ்க்கைப் பணம் கிடைக்கின்றது. தொழில் கல்வி முடிந்து வேலைக்கு அனுப்பும்வரை மாணவ மாணவிகளுக்கு அரசாங்கமே இலவசமாக உணவு உடை இருப்பிடம் மற்றும் அவசியமான செலவுகளை ஏற்றுக் கொள்கின்றது. பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளுக்குத் தேடி வைக்கவேண்டுமே என்ற நிலை இல்லை.

இன்று நாட்டில் செயல்படும் சட்ட திட்டங்களும் பட்ஜட் அமைப்பும் முதலாளித்துவ நாடுகளைவிட மிகவும் கேவலமானது மனிதனை மனிதன் சுரண்டும் நிலையில் உள்ளது. 'வரியை பணக்காரர்தானே கொடுக்கின்றார்கள்' என்று கூறுகின்றனர். அவர்களுக்கு பணம் எங்கிருந்து கிடைக்கின்றது? நாட்டில் காகித செலாவணி மக்களின் சுபிட்சத்தை நிலைநாட்ட ஏற்பட்டதா? இவற்றை எல்லாம் கவனிப்பது இல்லை. பணத்தை எல்லாம் திரட்டி இலவச கல்வி அளிக்கின்றோம், திட்டத்திற்குச் செலவிடுகின்றோம் என்று சொல்லுகின்றனர்.

பட்டினியாக வாடி வதங்குகின்றவனுக்குக் கூறும் ஏகாதசியின் மகாத்மியம், கோயில் கண்ட இடமெல்லாம் திரிந்து உண்டைக் கட்டி வாங்கும் சோற்று மாடங்களின் பேச்சுப் போன்றுதான் ஆகும். கொள்ளைக்காரன் ஒருவன் கொள்ளை அடித்த பொருளை தருமம் செய்யத்தானே திரட்டியதாக கூறினால் குற்றவாளி அல்ல என்று தள்ளி விட முடியுமா? தருமம் செய்வது செய்யாதது என்பது அல்ல நமது வாதம். இதுபோன்றுதான் இன்றைய பட்ஜட் அமைப்பும் இது ஜனநாயக சோஷலிசத்திற்கு உகந்தது அல்ல. கைதேர்ந்த சுரண்டலுக்கு ஏற்றது

"மண்ணின் இன்பங்களை விரும்பி மானிலத்தின்
சுதந்திரத்தின் மாண்பினை இழப்பரோ
கண் இரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கினல்
கை தட்டிச் சிரியாரோ"
"விண்ணில் இரவிதனை விட்டுவிட்டு
எவரும் போய் மின்மினி கொள்வாரோ
கண்ணினும் இனிய சுதந்திரம் போனபின்
கைகட்டிப் பிழைப்பாரோ"

இன்றைய நிலையில், மக்கள், வலியும் வனப்பும் பெற நல்லதோர் சமுதாயம் ஏற்பட, தாங்களே காரணமாக இருக்கின்றனர். இதனை மறப்பதற்கு இல்லை; இதனை எதிர்ப்பதற்கும் இல்லை. இதனை உணர்ந்து மக்கள் செயலில் ஈடுபடவேண்டும். மக்களுக்கு எது நல்லது எது கெட்டது என எடுத்துக்கூற நல்லவர்கள் இருக்கின்றனர் இதற்காகவே அவர்கள் இலக்கியங்கள் எழுதுகின்றனர். அவர்களின் பொன் எழுத்துக்களைப் போற்றிக் கொண்டாடுவது மக்களின் தலைமையான கடமையாகும்.

"காக்கை கரவா கரைந்து உண்ணும் ஆக்கமும்
அன்ன நீரார்க்கே உள"

மக்கள் ஜனநாயகத்தின் உண்மைத் தத்துவத்தை உணரவேண்டும். அன்னியன் இதற்குமுன் பாரதநாட்டு மக்களின் தலைவிதியை நிர்ணயித்து வந்தான். பூர்வ ஜன்மத்தின் பலாபலனல் ஒருவன் ஏழை என்றும் பணக்காரன் என்றும், உயர்ந்த சாதியில் பிறந்தவன் என்றும், தாழ்ந்த சாதியில் பிறந்தவன் என்றும், வஞ்சகர்களும் பாதகர்களும் ஏமாற்றிவந்தனர். இவை எல்லாம் வஞ்சகமாக திட்டமிட்டு செய்யப்பட்டவைகள். இவற்றை ஏன் நாம் ஏற்றுக்கொள்ளவேண்டும்? மரணத்தின் பின் மனிதர் நிலையைப்பற்றி ஆன்மீக நூல்கள் கூறுகின்றன.

''பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பு ஒவ்வா
செய்தொழில் வேற்றுமையான் ''

என்ற இயற்கைச் சட்டம் அங்கு நிலைநாட்டப்படுவதைக் காணலாம்; இனத்தின் பெயரால் சாதியின் பெயரால் அங்கு நிலைநாட்டப்படவில்லை. ஆனால் வஞ்சகர்கள் திரித்துப் பொருள் கூறும்பொழுது அதனை "மாறுபட உரைத்தல்" என்ற குற்றம் என கூறவேண்டும். அதனை எதற்காக ஏற்றுக் கொள்ளவேண்டும்?

"தலையில் இழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை"

"ஊழையும் உட்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாளாது உஞற்றுபவர்"

"தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன் திருநீல கண்ட குயவனுர்க்கும் அடியேன்" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டத் தொகைபாடுகின்றார். சிவன் அடியார்களின் திருக்கூட்டத்தை சாதியின் பால் இனத்தின் பால் இங்கு நிலைநாட்டப் படவில்லை.

அந்தணர் என்பது பிறப்பால், சாதியால் அல்ல.

"அந்தணர் என்போர் அறவோர் மற்று எவ் உயிர்க்கும்
செந்தண்மை பூண்டு ஒழுகலான்"

ஆனால் இந்து மத சட்டம் என்று ஒரு வஞ்சக சட்டத்தை இந்த நாட்டில் நிலைநாட்டி சாதி சண்டைகளையும் இனச் சண்டைகளையும் மதச் சண்டைகளையும் வளர்த்து இருக்கின்றனர். இதனை எதற்காக ஏற்றுக்கொள்ளவேண்டும்?

"அறிவுடையார் எல்லாம் உடையர்
அறிவிலார் என்னுடைய ரேனும் இலர்"

இன்றைய நிலையில் இந்த நாட்டில் நல்ல ஆட்சி ஏற்பட மக்கள் தங்கள் வாச்கை நன்முறையில் செலவிட.

வேண்டும். துப்பாக்கியினாலும் குண்டுகளாலும் ஆதிக்கத்தை பிடிக்கமுடியாது. இந்தியக் குடியரசு மக்களின் வாக்கு என்ற மந்திர சக்தியினால் வளர்கின்றது. இது அணுசக்தியிலும் அதி உன்னதவலிமை பெற்றது. இதனைத்தான் ஆதி பராசக்தி பாரத தேவி என தேசியகீதம் உருவகம் கொடுத்து நம்மிடையே உணர்ச்சியை ஊட்டுகின்றது.

"அன்பு அறிவு தேற்றம் அவா இன்மை இந் நான்கும்
நன்கு உடையான் கட்டே தெளிவு"

ஆகவே நாட்டில் நல்லதோர் ஆட்சி ஏற்பட மக்கள் தங்கள் சுகதுக்கத்தை நிர்ணயிருக்கும் பொன்னான வாக்குகளை வஞ்சகர்களுக்கு மறந்தும் அளிக்கக் கூடாது. இதனை மறந்தால் தற்கொலைக்கு ஒப்பாகும். மக்கள் கீழ் நிலைக்குத் தள்ளப்படுவர்

"பெயக் கண்டு நஞ்சு உண்டு அமைவர் நயத்தக்க
நாகரீகம் வேண்டுபவர்"

நமக்கு என்ன வேண்டும்? எல்லோருக்கும் உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க இடமும், போதுமான கல்வி அறிவும், போதுமான தற்பாது காப்பும், அவரவர் அறிவிற்கும் ஆற்றலுக்கும் ஏற்ற வகையில் ஊதியமும் நன்மதிப்பும் கிடைக்கச் செய்யவேண்டும். இதற்காகத்தான் விடுதலைப் போராட்டம் நடத்தினோம்.

"ஏழை என்றும் அடிமையென்றும் எவனும் இல்லை
சாதியில்
இழிவு கொண்ட மனிதர் என்பர் இந்தியாவில்
இல்லையே"

இந்த அடிப்படையில் சுதந்திர தாகம் நாட்டில் தெய்வீகத் தன்மையுடன் விளங்கியது.

இதனை நிலைநாட்டத்தான் அரசாங்கம் இருக்கின்றது. அன்னிய படை எடுப்பை தடுப்பதற்கும் உள் நாட்டுக்

கலவரத்தை தடுப்பதற்கு மட்டும் அரசாங்கம் அமைய வில்லை.

அரசியல் நிர்வாகம் என்பதனை விஞ்ஞான கண் கொண்டு பார்க்க வேண்டும். மக்களுக்குக் கூடுதலான நன்மையும் சுபிட்சமும் ஏற்படவேண்டும். மாவட்டங்கள் மக்களின் பிரதிநிதி மந்திரியின் தலைமையில் இருக்க வேண்டும். அவருக்கு உதவியாக உதவி மந்திரியும் இருப் பர். கலெக்டர் என்பதற்குப் பதில் காரியதரிசியும் உப காரியதரிசியும் இருப்பர். மாவட்ட அலுவலகங்கள் எல் லாம் மாவட்ட அதிகாரிகள் எல்லாம் மத்திய மாநில ஆட் சிக்கு நேரிடைத் தொடர்பு இல்லாது மாவட்ட மந்திரியின் கீழ் இயங்கவேண்டும். மத்திய மாநில மந்திரிசபை மாவட்ட ஆட்சியானது மாநிலத்திற்கும் பாரதத்திற்கும் பாதகம் ஏற்படாதவகையில் கண்காணிக்கவேண்டுமே அல்லாது நேரிடை ஆட்சி நடத்துவது ஜனநாயக சோஷ லிச முறை அல்ல. அத்துடன் மாநிலங்கள் தோறும் ரிசர்வ் பாங்கும், இராணுவமும் அமையவேண்டும். இத னல் காகித செலாவணி மாநிலத்திற்கு மாநிலம் கட்டுப் படுத்த முடியும். இராணுவம் அன்னிய படை எடுப்பை தடுப்பதற்காக என்று இல்லாது நாட்டில் அமைதியை உண்டாக்கும் நிலையில் அமைகின்றது. தேசிய பாதுகாப்பு என்பது ஓர் கற்பனை சதி ஆகும். இது அடிமை ஆட்சிக்கு உகந்ததே அல்லாது ஜனநாயக சோஷலிசத்திற்கு உகந் தது அல்ல. ஏனெனில் மக்களை கோழைகளாகவும், தம்மை தாமே பாதுகாத்துக்கொள்ள உரிமை இல்லாதவ ராகவும் ஆக்கும் எத்திட்டமும் தேசிய பாதுகாப்பு என்று சொல்வதற்கு இல்லை. எல்லோருக்கும் ஆயுதம் தாங்கும் உரிமையும் யுத்தப்பயிற்சியும், நாகரீக மனிதர்களாய் நடந்துகொள்ளும் விதமும் அதற்கு உரிய சட்டத்திட்டங் களும் ஏற்பட்டால் இராணுவச் செலவு குறைகின்றது ; நெருக்கடியான நேரத்தில் பட்டாளத்தைப் பெருக்க வழி வகைகள் உண்டாகின்றன.

அமெரிக்காவின் ஜனாதிபதி அறிஞர் கென்னடி சுட்டு கொல்லப்பட்டார். அதற்காக அந்த நாட்டில் ஆயுதம்

தாங்கும் உரிமை மக்களிடமிருந்து அபகரிக்கப்படவில்லை அபகரிக்கவும் முடியாது. ஐரோப்பாவில் மக்களுக்கு ஆயுதம் தாங்கும் உரிமை இருப்பதால் அங்கு அடிமை ஆட்சி நிலைநாட்ட முடிவதுஇல்லை. ஆனல் பாரத நாட்டில் மக்களின் வாக்கைப் பெற்று சட்ட சபைக்குச் செல்கின்றவர்கள் மக்கள் தங்களைத் தாங்களே பாதுகாத்துக் கொள்ள வழிவகைகள் செய்யவில்லை. மந்திரிகளும் ஜனதிபதிகளும் தங்களைப் பாதுகாத்துக்கொள்ள ஆயுதம் தாங்கியவர்களை வைத்துக் கொள்கின்றனர். இது நேர்மை அற்றது. அதிகாரத்தை மக்களிடமிருந்து பெருகின்றேம் என்ற உணர்ச்சி இருந்தால் ஜனநாயக சோஷலிசத்திற்கு முரணுன காரியங்களில் ஈடுபட மாட்டார். அகில இந்திய காங்கிரசு கட்சியில் பத்து இலட்சம் அங்கத்தினருக்கு மேல் இருக்கலாம் ; சுதந்திரத்திற்காகப் போராடி இருக்கலாம். இதற்காக இந்த நாட்டை ஆள உரிமை கொண்டாடுவது வஞ்சகமும் நேர்மையற்ற செயலும் ஆகும். இது எல்லாக் கட்சிகளுக்கும் பொருந்தும். இன்று நாட்டில் பல கட்சிகள்உள்ளன. தேர்தல் நிதி என இலட்சக்கணக்காகப் பணம் திரட்டுகின்றன.நெல்லை மாவட்டத்தில் மட்டும் தேர்தல் நிதியாக ஒரு இலட்சத்து அறுபத்தி மூன்று ஆயிரம் ரூபாய் காங்கிரசு கட்சித் தலைவரின் 63வது வயது கொண்டாட்டத்தில் அவரிடம் கொடுக்கப் பட்டிருக்கிறது.

இவற்றை எல்லாம் இங்கு குறிப்பிடுவது ஒரு கட்சிக்காகவோ சுயநலத்திற்காகவோ அல்ல. நாட்டில் நல்லதோர் ஆட்சி ஏற்பட அடித்தளம் நன்கு அமையவேண்டும் என்பதற்காகத்தான்; சித்தர்களும் ஞானிகளும் தோன்றிய புண்ணிய பூமியில் எங்கும் அன்பும் அமைதியும் ஆனந்தமும் பொங்கச்செய்வதற்காகத்தான்; நேர்மை அற்ற அரசியல் நிர்வாகத்தினுல் பத்து பதினைந்து ஆண்டுகளுக்குள் கிளர்ச்சி ஏற்பட்டு பல இன்னல்களுக்கு மக்கள் ஆளாக்கப்பட்டு இருளடையச்செய்யாது நல்லதோர் சமுதாயத்தை நிலைநாட்டி ஒளிமயமாக்கச் செய்வதற்காகத்தான். 'நந்தவனம் அழிந்தது கழுதை மேய்ந்தது

என்பர். இன்பத்தை ஊட்ட வேண்டிய அரசியல் நிர்வாகம் வஞ்சகர்களிடமும் வீணர்களிடமும் விடப்பட்டால் நாடு பாழடைந்து விடும், பச்சை மரமும் பட்டுப் போகும்.

இந்திய தேசிய கீதம் இந்திய விடுதலைக்குமுன் வங்க கவிஞர் ரவீந்திரநாத் தாகூரினுல் பாடப்பட்டது. புனித பாரதத்தின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கும் சகல சக்தி வாய்ந்த ஆதிபராசக்தி பார்வதிதேவியை தன் கண்ணில் காண்கின்ருர். உளம் நெக்கு நெக்காக உருகுகின்ருர். தீயசக்திகள் எல்லாம் ஆழ்ந்து, தேவியின் திருநாமம் மக்களின் உள்ளக் கிளர்ச்சி அடையச் செய்வதை தனது மானசிக கண்ணுல் கண்டு கண்ணீர் விடுகின்ருர்.

காளிதாசர் சியாமளாதேவியை "சர்வாத் மிகே, சர்வ தந்திராத் மிகே, சர்வயந்திராத் மிகே, சர்வநாதாத் மிகே, சர்வ போகாத் மிகே, சர்வ சர்வாத் மிகே" என்று காண்கின்ருர்.

கவிஞர் பாரதியார் "சொல்லுக்கு அடங்காவே பராசக்தி சூரத்தனங்கள் எல்லாம், வல்லமை தந்திடுவாள், பராசக்தி வாழி என்றே துதிப்போம்" என்று கூறுகின்ருர்.

கவிஞர் சுத்தானந்த பாரதியார் "வான்வளை இடமெல்லாம் கான்மலர்வனம் எல்லாம் வளம் பெரும் கோயிலாய் விளங்கும் அருட்சுடரை" என்று கூறுகின்ருர்.

ஆதி குமரகுருபர சுவாமிகள் "வடநூல் கடலும் தேக்கு செழுந்தமிழ் செல்வமும் தொண்டர் செங் நாவினின்று காக்கும் கருணைக்கடலே" என்று போற்றிக் கொண்டாடுகின்ருர்.

கவிஞர் ரவீந்திரநாத் தாகூரின் தேசிய கீதமும் இங்கு குறிப்பிட்ட கவிஞர்களின் உளக்கிடக்கையும் ஒரு எல்லையற்ற பரம்பொருள் ஆனந்தமூர்த்தியாய் அருளொடு நிறைந்து எங்கும் நிற்பதைக் காட்டுகின்றன. இந்திய

தேசிய கீதத்தின் தெய்வீகத்தை உணர்ந்தவா அமரர் சிறப்பினைக் காண்பர். இது அரசியல் கூடங்களுக்கும் கேளிக்கை இடங்களுக்கும் பாடுவதற்காக ஏற்பட்டது அல்ல; பூசனை புரிவதற்கு உரியது.

இனி இந்நாட்டின் விடுதலைக்காகப் போராடி தாங்கொணாத் துயரம் அடைந்த நாட்டுப்பற்றும் நன்மொழிப் பற்றும் கொண்ட தியாக தீபங்களின் ஒளியினைக் காண மகான் மகாத்மா காந்தி அடிகளின் அடிச்சுவட்டைப்பின் தொடர்வோம்; சுதந்திரத்தின் மான்பினைக் காண்போம்; எங்கும் தியாக தீபத்தை ஏற்றுவோம்; எங்கும் உள்ளானும் இல்லை, இல்லானும் இல்லை என்ற பேதம் அபேதம் இல்லா சமுதாயத்தை நிலைநாட்டுவோம். அதுவே நமது மூச்சினில் கலந்து உறவாடட்டும்.

"வீர சுதந்திரம் வேண்டி நின்றார் பின்னர்
வேறு ஒன்று கொள்வாரோ
என்றும் ஆறமுதுக்கு ஆசை கொண்டார்
கள்ளில் அறிவைச் செலுத்துவாரோ"

"பாருக்குள்ளே நல்ல நாடு எங்கள் பாரதநாடு
பரஞானத்திலே உயர் மோனத்திலே
சந்நிதானத்திலே அன்னதானத்திலே உயர் நாடு"

பாரத நாடு பழம் பெரு நாடு. உலக நாகரீகத்திற்கே வித்திடுகின்றது. அகில உலகத்திற்கு பாரதம் முகம்போன்றும், தமிழ் திரு நாடுபுருவ மத்திபோன்றும் தோன்றிக் கொண்டிருக்கின்றன. இந்த உண்மையை உடல் நூல், உள நூல், உயிர் நூல் வல்லார் அறிவர். வீண் புகழ்ச்சி அல்ல!

இந்த நாட்டில் சித்தர்களும் ஞானிகளும் தோன்றி உள்ளனர்; அதி உன்னத இலக்கியங்கள் தோன்றி உள்ளன. இத்தகைய பேரும் புகழும் வாய்ந்த நாடு எவ்வாறு அந்நியனுக்கு அடிமை ஆயிற்று? இதற்கு உடந்தையாக

இருந்த நாட்டுத் துரோகிகளும் வீணர்களும் யாவர்? இவர்கள் எவ்வாறு சமுதாயத்தில் நடுஊரில் நச்சுமரம் போன்று தோன்றினர். இவற்றை எல்லாம் நாம் சிந்திக்காமல் இருப்பதற்கு இல்லை,

இந்த நாட்டின் சரித்திரம் வேண்டுமென்றே திரித்து எழுதி இருப்பதுடன், இந்த நாட்டில் மதத்தின் பெயரால் சாதியின் பெயரால், இனத்தின் பெயரால், மொழியின் பெயரால், தீய சக்திகள் மாய உருக்கொண்டு இந்த நாட்டை அடிமைப் படுத்தி உள்ளன என்பதனை அறிந்து கொள்ள உண்மையை நாடுகின்றவர். நல்லதோர் சமுதாயத்தை அமைக்க விரும்புகின்றவர், எங்கும் அமைதியும் ஆனந்தமும் பொங்க உழைக்கின்றவர் கருதுவது இயற்கை.

இந் நிலையில் நாம் ஆதி கால சரித்திரத்தை விட்டு விட்டு நவீன காலத்திற்கு வருவோம். இந்த நாட்டை அடிமை ஆக்கிய ஐரோப்பியரைப் பற்றியும் அதிலும்பிரிட்டானியரைப் பற்றியும், அவர்களின் நாட்டைப் பற்றியும் சற்று ஆராய்வோம்.

உலக சரித்திரத்தை நோக்கும் பொழுது ஐநூறு ஆண்டுகளுக்கு முன் ஐரோப்பா நாகரீகம்மிகுந்த நாடாக திகழவில்லை. அங்கு சண்டைகளும், கொள்ளைகளும், கொலைகளும் மிகுந்து இருந்தன. அந் நாட்டு மக்கள் அநாகரீகமாகவும் காட்டு மிராண்டிகளாகவும் வாழ்ந்து வந்தனர். அந்த நாட்டின் இயற்கை அமைப்பே இதற்கு காரணம். வெளி நாடுகளிலிருந்து பொருள்களைப்பெற்று வாழ்ந்து வந்தனர்.

பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதிக் காலத்தை ஐரோப்பாவின் நவீன கால ஆரம்பம் என்று கூறுகின்றனர் இந்தக் காலத்தில் கிருத்துவ மடங்களுக்குச் சொந்தமான சொத்துக்கள் எல்லாம் அரசாங்கத்தின் கைக்கு மாறின. யுத்தத்தில் கருமருந்தை உபயோகிக்க ஆரம்பித்தனர்.

புகழ் பெற்ற நாடக பேராசிரியர் சேக்ஸ்பியர் பதினேழாம் நூற்றுண்டில் தனது நாடகத்தில் ஓர் அழகிய பெண்ணைக் குறிப்பிடும்பொழுது 'இந்தியாவின் தங்கமே' என்று கூறுகின்றுர். இந்தியா பொன்விளையும் பூமி என அறிந்த ஐரோப்பியர்கள் கடல் மார்க்கமாக இந்தியாவிற்கு வழி கண்டுபிடிக்க முயன்றனர், இதனுல் கொலம்பஸ் அமெரிக்காவை கண்டுபிடிக்க முடிந்தது, வாஸ்கோட காமாவினுல் ஆப்பிரிக்காவின் தென்கோடி நன்நம்பிக்கை முனையைக் கடந்து பாரதத்தின் மேலைக்கடல் கரைக்கு வரமுடிந்தது.

அமெரிக்கா, ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா கண்டங்களில் ஐரோப்பியர்களின் குடியேற்றம் கிறிஸ்து பிறந்த பதினேழு பதினெட்டாவது நூற்றுண்டில் நடந்த சம்பவம் ஆகும். இன்று அமெரிக்கா உலக நாடுகளுக்கெல்லாம் அதி உன்னத நிலையில் இருப்பது ஏன் ? அதே சமயத்தில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அதி உன்னத நிலையில் இருந்த பாரத நாடு பாழ்பட்டு நிற்பது ஏன்? இதனைப்படித்த மேதை என அதி உன்னத பதவி அடைந்து "சர்" பட்டம் பெற்றவர்களும் "டாக்டர்" பட்டம் பெற்றவர்களும் கூறவேண்டும். இவர்கள் மிருக காட்சிசாலையில் கண்ணுடிப் பேழையில் வைக்கவேண்டியவர்களே அல்லாது சமுதாயத்திற்கு மத்தியில் இருப்பதற்கு உகந்தவர்கள் அல்ல. இவர்களால் நாடு உயரவும் இல்லை, உயர்த்தப்படவும் இல்லை. இவர்களின் படிப்பும் அறிவும் நாய்க்கு முழுத்தேங்காய் கிடைத்ததுபோன்றுதான் ஆகும்.

> "நாய்வாலை அளவெடுத்துப் பெருக்கித் தீட்டி
> நற்றமிழை எழுத எழுத்தாணியாமோ
> பேய் வாழும் சுடுகாட்டைப் பெருக்கித்தள்ளி
> பெரிய விளக்கு ஏற்றிவைத்தால் வீடதாமோ"

ஐரோப்பாவின் ஆதிகால சரித்திரத்தை நோக்கும் பொழுது கிரேக்கர்களும், யவனர்விலும் அரேபியர்களும்

எகிப்தியர்களும், ஆழ் கடலில் செல்லும் கப்பல் கட்டுவதற்கு மலையாளத்திலுள்ள தேக்கு மரங்களையே உபயோகித்து வந்தனர் என்று ஆராய்ச்சி நூல்கள் கூறுகின்றன. அரேபிய பாரசீக மெஸபடோமியாவில் இந்தியாவின் காலடிகளே காணப்படுகின்றன. அந்தக் காலத்தில் கடல் வாணிபத்தில் தமிழகம் அதி உன்னத நிலையில் இருந்து வந்திருக்கிறது. துப்பாக்கிமருந்தும் நம் நாட்டிலிருந்தே கொண்டு போயிருக்கின்றனர். அது மட்டுமல்ல, இன்றுகூட அணு உலைக்கு மூலப்பொருள்களாகிய தோரியம், உரேணியம் இந்த நாட்டிலிருந்தே கொண்டு சென்றிருக்கின்றனர். 'பட்டிலும், மயிரிலும், பருத்தி ஆடையிலும்,என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் பட்டினப்பாலை கூறுகின்றது. அவ்வாறு இருந்தும் இந்த நாட்டில் அன்னிய துணிகளை இறக்குமதி செய்தும் இந்த நாட்டுத்தொழில் அழியவும் இந்த நாட்டின் சிறந்த தொளிலாளர்களின் கை கட்டை விரல்களை வெட்டி வீழ்த்தி இருப்பதையும் சரித்திரம் கூறும்,

இப்படிப்பட்ட மிகவும் பிற்போக்கில் உள்ள ஐரோப்பியர் உலகம் எங்கும் கடல் ஆதிக்கத்தையும் காலனி ஆதிக்கத்தையும் நிலை நாட்டினர் என்றால் எத்தகைய கொடுமைகளை கையாண்டிருக்கவேண்டும்! அரசாங்கம் வியாபாரம் என்ற பெயரில் கொள்ளைக்கூட்டங்கள் நவீன யுத்த இயந்திர தளவாடங்களை உபயோகப்படுத்தி இருக்கவேண்டும். இந்த நாட்டின் சரித்திரம் திரித்து எழுதப்பட்டிருப்பதால் உள் நாட்டுச் சண்டைகளைப்பற்றி நன்கு தெரிவதற்கு இல்லை.

பாரதத்திற்கு வியாபாரத்திற்கு முதல் முதலாக பதினாறு, பதினேழாவது நூற்றாண்டில் வந்த ஐரோப்பியர்கள் போர்ச்சுக் கீசியர், டச்சுக்காரர், பிரஞ்சுக்காரர், கடைசியில் ஆங்கிலேயர்கள். இவர்களது நாடுகளையும் இவர்களது நாட்டு மக்களின் எண்ணிக்கையும் ஒன்று சேர்த்தால் தமிழ் நாட்டில் ஒன்று இரண்டு மாவட்டங்களுக்கு மேல் இருக்காது. அவ்வாறு இருந்தும் இவர்

கள் ஆருயிரம்மைலுக்கு அப்பால் இருந்து வந்து கோட்டைக் கொத்தளங்கள் அமைத்து கருமருந்துகளேயும் பீரங்கிகளேயும் துப்பாக்கிகளேயும் வைத்திருக்கின்றனர். உள்நாட்டுப் போராட்டத்தை தூண்டிவிட்டிருக்கின்றனர் தமிழ் நாட்டில் பல சிற்றரசர்கள் இருந்திருக்கின்றனர். இவர்களுக்குள் கலகம் மூட்டி நாட்டைக் கைப்பற்றி இருக்கின்றனர் வஞ்சகமாக.

கடைசியாக இந்த நாட்டை ஆண்ட ஆங்கிலேயர்களேயும் அவர்களது நாட்டையும் கவனிக்கும் பொழுது கேவலம் ஒரு சிறிய தீவில் உள்ளவர்கள் இப்பொன் நாட்டை அடிமைப் படுத்தினர் என்ருல் நம் உள்ளமே பதறுகின்றது. நம் இதயம் துடிதுடிக்கின்றது.

"வலியின் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின் தோல் போர்த்து மேய்ந்தற்று"

இந்த நாட்டை ஆங்கிலேயர்கள் அடிமைப்படுத்தினது, இந்த நாட்டில் உள்ள வஞ்சகர்களின் மூலம். இந்த நாட்டில் அன்னியர்கள் செய்த கொடுமைகள் எல்லையற்றவை. இதனைக்கேட்க கல்மனமும் கசிந்து உருகும். ஆனல் இந்த நாட்டில் அடிமை ஆட்சியை நிலை நாட்டி பன்றிகளே கவனித்தால் அவர்கள் பண்டிதர்களாயும் படித்தமேதைகளாயும் மடாதபதிகளாயும் செல்வச்சீமான்களாயும் இருந்திருக்கின்றனர். இதனல் தான் இந்த நாடு பாலேவனமாக மாறி பாழடைந்த நிலைக்கு வந்திருக்கின்றது என்று நினைக்க வேண்டியிருக்கின்றது.

"நெஞ்சில் துறவார் துறந்தார் போல்
வஞ்சித்து வாழ்வாரின் வன்கணாரில்"

ஆருயிரம் மைலுக்கு அப்பால் இருந்து பிழைப்பிற்காக. வியாபாரத்திற்காக, வந்த ஆங்கிலேயர்கள் இந்த நாட்டை பிரிட்டிஷ் இந்தியா என்று நிலை நாட்டினர் என்ருல் இதை விட மானம் கெட்ட, வெட்கம் கெட்ட துரோகச்செயல் வேறு ஒன்றும் இருப்பதற்கு இல்லை

அத்துடன் சட்டங்கள் மூலம் நீதி, ஒழுங்கு. ராஜ விசுவாசம் என்று இந்த நாட்டில் பிரிட்டிஷ் ஆட்சியை நிலை நாட்டிய கொடிய பாதகர்களை, சண்டாளர்களை, நினைக்கும் பொழுது நம் கண் அனல் கக்குகின்றது. இவர்கள் மனித உருவில் பன்றிகளாய், பேயாய், பிறந்திருக்கின்றனர் இப்புனித மண்ணில்.

இந்த நாடு பிரிட்டிஷாருக்குச் சொந்தமானது. இந்த நாட்டின் சக்கரவர்த்தி பிரிட்டிஷ் மன்னர். இந்த நாட்டு மக்கள் பிரிட்டிஷ் குடிமக்கள் இவர்கள் பிரிட்டிஷ்காரர்களின் சட்டங்களுக்கும் திட்டங்களுக்கும் அடங்கி ஒடுங்கி நடக்க வேண்டும். இவர்களுக்கு ஆயுதம் தாங்கும் உரிமை இல்லை. இவர்கள் அனுமதி இல்லாது கடலில் செல்ல உரிமை இல்லை. பிரிட்டிஷ்காரர்கள் கர்த்தரின் பொன் மொழிகளை தீயிட்டு பொசுக்கினர்: சிலுவையின் புனிதத் தன்மையை மறந்தனர்.

இந்த நாட்டு மக்களை அடிமைப்படுத்த மாவட்டங்கள் தோறும் நூற்றுக் கணக்கான ஆயுதம் தாங்கிய ஜவான்களை வைத்துக்கொண்டனர். இவர்கள் சுடுவதிலும் சண்டை செய்வதிலும் நன்கு பழக்கப் படுத்தப்பட்டவர்கள். இவர்களுக்கு மேலாக இராணுவம். ஆயிரக்கணக்கான பேர்கள் அடங்கிய பட்டாளங்களை பல பிரிவுகளாகப் பிரித்து முக்கிய இடங்களில் வைத்துக்கொண்டனர். இவர்கள் பீரங்கிகள், டாங்கிகள் முதலிய நவீன யுத்த தளவாடங்களை உடையவர்கள். இவர்கள் தரைப் படையைச் சேர்ந்தவர்கள். இதைப்போன்று கப்பல் படையும், விமானப்படையும் இருக்கின்றன. இவை இல்லாது நகர போலீஸ்களும், மாவட்ட போலீஸ்களும் முக்கிய ஊர்களிலும் பல்லாயிரக்கணக்காக வைத்துக் கொண்டனர். இந்த நாட்டின் செல்வம் எல்லாம் கொள்ளை கொள்ளவும் இந்த நாட்டில் பிரிட்டிஷ் ஆட்சி நிலைத்து இருப்பதற்கும் இவை எல்லாம் திட்ட மிட்டு ஏற்பட்டவை" இதற்குத் தகுந்தாற் போல் இந்தியன் தண்டனை கோடு. கிரிமினல் கோடு, நகர போலீஸ் சட்டம் ஏற்படுத்திக்

கொண்டனர். இவற்றின் மூலம் இந்த நாட்டு மக்களை அடிமைப்படுத்தி இந்த நாட்டின் செல்வத்தையும் மக்களின் உழைப்பபையும் பட்ஜட் ரகசியம் என்ற பெயரில் வரவு செலவு திட்டங்களைத் தயாரித்து கொள்ளை அடித்து வந்தனர். செல்வமும் சிறப்பும் பெற்று வற்றாத பொய்கையும் வள நாட்டையும் தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச் செல்வரும நிறைந்த இப் புண்ணிய பூமி, தாழ்வுற்று வையத்து நாட்டிலெல்லாம் விடுதலை தவறிக் கெட்டுபாழைடைந்து விட்டது. இந்த நாட்டுமக்கள், ஆடிக் காற்றில் அகப்பட்ட சருகு போன்றும், பூனையிடம் சிக்கிய கிளி போன்றும் ஆயினர்.

போலீஸ் படையில், பட்டாளத்தில், பல் வேறு இனத்தைச் சேர்ந்த, பல் வேறு மொழியைச் சேர்ந்த பட்டாளங்கள் இருந்தன. நாட்டுப் பற்றுக்காரணமாக எங்காவது பட்டாளம் இயங்கத்தடை ஏற்பட்டால் வேறு ஒரு மொழி,இனத்தைச் சேர்ந்த, பட்டாளத்தை அனுப்பி அடக்குவர். இவர்களுக்கு மேலாக பிரிட்டிஷ் இராணுவம் இவர்களுக்கு வெகு தூரம் சுடக் கூடிய ஒரே நேரத்தில் தொடர்ந்து சுடக் கூடிய தானே இயங்கும் இயந்திர துப்பாக்கிகள் உண்டு. இவ்வாறு எல்லாம் பற்பல இடங்களில் இந்திய பாதுகாப்பு என்று கூறி இந்த நாட்டை கொள்ளை அடித்து வந்தனர். இதனாலே பாஞ்சலம் குறிச்சி மன்னன் தூக்கில் இடப்பட்டது; சிப்பாய்க்கலகம் வெற்றி யடையாமல் போனது; வ. உ. சிதம்பரனார் செக்கு இழுத்தது.

இந்த கொள்ளைக் கூட்டத்தினரை எதிர்க்க அகில இந்தியா முழுவதும் இயக்கம் ஏற்பட வேண்டும், மக்களின் ஆதரவு வேண்டும். இந்த நாட்டில் அன்னிய கொள்ளைக் காரர்களுக்கு எதிராக சிவில், இராணுவ இலாகாக்கள் எல்லாம் நாட்டுப் பற்றுடன் இயங்க வேண்டும். வஞ்சகர்களாகிய பிரிட்டிஷ் காரர்களோ இந்த கொடிய ஏகாதிபத்தியத்தை இப்புண்ணிய பூமியில் நிலை நாட்டியது ஒரு இனத்தை ஏமாற்றி, ஒரு

மதத்தில் உள்ளவர்களுக்கு ஆசை காட்டி, ஒரு சாதியில் உள்ளவர்களுக்கு சலுகைகள் காட்டி அகில இந்தியாவை யும் அடிமை ஆக்கி விட்டனர். வட இந்தியாவில் இந்து முஸ்லீம் வேற்றுமையும், தென் இந்தியாவில் திராவிடர் ஆரியர், பார்ப்பனர் பார்ப்பனர் அல்லாதார் வேறறுமை யும், சட்ட திட்டங்களின் மூலம் பரவச்செய்ய சதி செய் திருக்கின்றனர். இதற்காகவே தமிழ் நாட்டில் வேதாந்த சித்தாந்த சாத்திரங்களுக்கு விரோதமாக பிராமணர், பிராமணர் அல்லாதார், என்ற புதிய சாதியை உண் டாக்கி இந்த நாட்டின் அரசியல், கலாசார, பொருளா தாரத்தை தீய வழியில் இயங்கச்செய்ய வழி வகைகள் செய்துள்ளனர். இது விருப்பு வெறுப்பு அற்ற ஆராய்ச்சி யில் விடப்பட்டு. உண்மை தெரியவரின் இந்த நாட்டில் உள்ள மடாதிபதிகளும் ஆசாரிய பீடங்களும் கட்சித் தலைவர்களும், குற்றவாளிக் கூண்டில் ஏற வேண்டியவர் என்பது மலை இலக்கு.

"கொலை மேற் கொண்டாரில் கொடிதே அலைமேற் கொண்டு அல்லவை செய்து ஒழுகும் வேந்து"

இத்தகைய கொடிய வஞ்சகர் களாகிய பிரிட்டானி யார்களை எதிர்த்துப்போராட வேண்டு மென்றால் அகில இந்தியா எங்கும் மக்கள் ஒரு மனப்பட்டு ஒன்று திரள வேண்டும், நவீன ஆயுதம் தாங்க வேண்டும். திட்டமிட்டு செயலில் இறங்க வேண்டும். இதற்கு வெளி நாட்டினர் உதவி அதாவது பிரிட்டனின் பகைமை கொண்டவர் களின் உதவி இல்லாது நடப்பதற்கு இல்லை. ஆகவே புரட்சி இயக்கத்தினர் வெளிநாட்டு உதவியை நாடினர். ஜப்பானும், ரஷ்யாவும், ஜெர்மனியும் நவீன இயந்திர துப் பாக்கிகளையும் யுத்த தளவாடங்களையும் கொடுக்க முன் வந்தன.

"பாட்டுக்கொரு புலவன் பாரதியடா அவர் பாட்டை பண்ணுடன் கேட்டால் நெஞ்சம் கிறு கிறுக்குமடா" என்ற படி தமிழகத்தில் தேசிய கவிஞர் பாரதியார் பாடலைக்கேட்டதும், வங்கத்தில் பங்கிம் சந்திர சுட்டர்ஜி

யின் வந்தே மாதரகீதம் கேட்டதும், எத்தனை ஐரோப்பிய கொள்ளைக் கூட்டத்தினர் கொல்லப்படுவரோ என்று அஞ்சினர். கப்பலோட்டிய தமிழன் வ. உ. சிதம்பரனாரின் வ. வே. சுப்பிரமணியத்தின் சொற்பொழிவைக்கேட்டதும் பஞ்சாபில் விநாயக சாவர்கார் வீர மொழிகளைக்கேட்டதும், எத்தனை இளைஞர்கள் நவீன ஆயுதங்களைத் தாங்கி அடிமை ஆட்சியின் ஆணிவேர்களைப் பொசுக்கி விடுவார்களோ என்று பயந்தனர். வ. உ. சிதம்பரனார் சுதேசி கப்பல் கம்பனியை நடத்தினார். கொள்ளையர்களுக்குப் பயமும் பீதியும் அதிகரித்து விட்டது. கப்பல் போக்குவரத்தை தடை செய்து அதனை மூடும் நிலைக்குக் கொண்டு வந்தனர்

புரட்சி இயக்கத்தில் ஈடுபட்டவர்கள் ஆரம்பக்கட்டத்திலே மிருகத்தனமாக நசுக்கப்பட்டு துப்பாக்கி முனைக்கு இரையாயினர். கராகிரகமும், நாடு கடத்தலும், தூக்கு தண்டனையும் தாண்டவமாடின. இருந்தாலும் தாய் நாட்டின் விடுதலைக்காக விடுதலைப்போர் எரிமலை போன்று அடக்கு முறைக்குப் பயப்படாது குமுறி எழ ஆரம்பித்து விட்டது. இமயம் முதல் குமரி வரை புரட்சி இயக்கம் தலை தூக்கி விட்டது. அன்னியனையும் அவனது ஆட்சியை நிலை நாட்டும் பாதகர்களையும் அடியோடு அழிக்க திட்டம் வகுத்துக் கொண்டிருந்தனர்.

இந்த நேரத்தில் தான் காந்தி அடிகள் தென் ஆப்பிரிக்காவில் அகிம்சைப்போராட்டத்தில் அரும் பெரும் தியாகங்கள் செய்து வந்தார். தென் ஆப்பிரிக்காவில் காந்தி அடிகள் பட்ட எல்லையற்ற துன்பங்களையும், அங்கு ஒப்பந்த வேலையாட்களாகச் சென்ற இந்தியர்களுக்கு ஏற்பட்ட கொடுமைகளும் அநீதிகளும் இனி காண்போம்.

"செயற்கரிய செய்வார் பெரியார் சிறியர்
செயற்கு அரிய செய்கலாதார்."

"எங்கும் சுதந்திரம் என்பதே பேச்சு!
இனி எல்லோரும் சமம் என்பது உறுதி ஆச்சு,
சங்கு கொண்டே வெற்றி ஊதுவோமே—இதை
தரணிக்கெல்லாம் எடுத்து ஓதுவோமே"

# 3

# சுதந்திர தாகம்

"என்று தணியும் எங்கள் சுதந்திர தாகம், என்று மடியும் எங்கள் அடிமையின் மோகம்"

காந்தி அடிகள் மேற்கு இந்தியாவில் கத்தியவார் தீப கற்பத்தைச்சேர்ந்தவர். அவர் கி,பி. 1869–ம் ஆண்டு அக்டோபர் மாதம் இரண்டாம் தேதி போர் பந்தரில் பிறந்தார். அவரது முழுப்பெயர் மோகன் தாஸ் கரம் சந்த் காந்தி. அவர் இங்கிலாந்து சென்று பாரிஸ்டர் பட்டம் பெற்று போர் பந்தரில் வக்கீல் தொழில் நடத்தினர். அவர் தென் ஆப்பிரிக்காவிற்கு ஒரு இந்திய வியாபார நிலையத்தின் வழக்கு அறிஞராகச் செல்லநேரிட்டது.

புனித பாரத புண்ணிய பூமியை விட்டு வயிற்றுப் பிழைப்பிற்காக இந்தியர்கள் ஒப்பந்த தோட்ட வேலைக்காக தென் ஆப்பிரிக்கா முதலிய நாடுகளுக்குச் சென்றனர். அவர்கள் பட்ட இன்னல்கள் நெஞ்சு பொறுப்பதற்கு இல்லை. இதனை உதாசீனப்படுத்தி மனைவி மக்கள் வீடு போகம் என்று மிருக நிலைக்குச் செல்ல மனம் இல்லை.

தென் ஆப்பிரிக்கா நிற வெறி பிடித்த நாடாக இருந்து வந்தது. ஐரோப்பியர்கள் இந்தியர்களை கருப்பர்கள் என்றும் மிருகங்களுக்கு ஒப்பானவர் என்றும் மதித்து வந்தனர். ஆனல் அவர்கள் எப்படிப்பட்டவர்கள்? "கொள்ளை கொலை செய்யும் கடல் கொள்ளைக்

கூட்டத்தினர். இவர்களை கூடல் நாய்கள் என்றும கூறுவர். இவர்கள் மனித சமூகத்தின் கொடிய துரோகிகள். வஞ்சகர்கள் என காட்ட சிலுவையும் அடையாளமாக வைத்துக் கொள்கின்றனர்.'' என்பது மறப்பதற்கு இல்லை.

தென் ஆப்பிரிக்காவில் டிரான்ஸ் வாலின் தலை நகர் பிரிட்டோரியா ஆகும். ஒரு வழக்கிற்காக அங்கு செல்ல காந்தி அடிகள் இரயிலில் முதல் வகுப்பில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். மாரிஸ் பர்க்கை இரயில் அடைந்ததும் ஒரு வெள்ளைக்காரன் அந்த பெட்டியில் ஏறினன். காந்தி அடிகள் இருப்பதைக் கண்டு கீழே இறங்கி போலீஸ் காரனை அழைத்து வந்தான். அவரது கையைப்பிடித்து இழுத்து வெளியே தள்ளினன்; அவரது பெட்டி படுக்கைகள் எல்லாம் வெளியே எரியப்பட்டன. என்ன கொடுமை பாருங்கள்!

ஐரோப்பியருக்கும் ஆப்பிரிக்காவிற்கும் யாதொருசம்பந்தமும் இல்லை. ஆனல் ஐரோப்பிய கொள்ளைக் கூட்டத்தினர் அங்கு குடி ஏறி அந்த நாடு தங்களுக்குச் சொந்தமானது என்று ஆட்சி செலுத்த ஆரம்பித்து விட்டனர்.

தென் ஆப்பிரிக்காவில் ஐரோப்பியர்களுக்குச் சொந்தமான கரும்பு தோட்டங்களும் தேயிலைத்தோட்டங்களும் இருக்கின்றன. இங்கு வேலை செய்ய ஒப்பந்தக் கூலி ஆட்களாக 1860-ம் ஆண்டு தாய் நாடாகிய பொன்னுட்டை விட்டு இந்தியர்கள் வந்தனர்.

இந்தியர்களின் எண்ணிக்கையும் செல்வமும் தென் ஆப்பிரிக்காவில் அதிகரித்து வந்தது. வெள்ளையர்கள் 1894-ஆம் ஆண்டில் தென் ஆப்பிரிக்காவிலிருந்து இந்தியர்களை வெளியேற்ற முயன்றனர். ஆயுள் முழுவதும் அடிமைக் கூலியாக இருக்கவும் சுதந்திர கூலியாக மூன்று பவுன் வரி நபர் ஒன்றுக்கு கட்டவும் சட்டம் இயற்றினர்.

1894-ஆம் ஆண்டில் நேட்டால் சட்டசபை ஆசிய வாசிகளுக்கு ஓட்டு உரிமை இல்லை என்று சட்டம் இயற்

றியது. நேட்டாலில் இரவு 9 மணிக்குப் பிறகு அனுமதிச் சீட்டு இல்லாமல் வீட்டைவிட்டு வெளியே செல்வதற்கு இல்லை. போயர்களாகிய டச்சுக் கொள்ளைக்காரர்கள் குடி ஏறிய ஆரஞ்சு பிரிஸ்டேட்டில் இந்தியர் சொத்து வைத்திருக்க,வியாபாரம் பண்ணை இவற்றில் ஈடுபட, உரிமை இல்லை, டிரான்ஸ் வால், கிரவுன் காலனியில் இந்தியர்கள் சொந்தநிலம் வைத்திருக்க மறுக்கப்பட்டது. அங்கு வசிப்பதற்குமூன்று பவுன் கொடுக்கவேண்டும்.அதுவும்சேரியில் தான் வாழ வேண்டும். கேப் காலனியில் இந்தியர்கள் நடை பாதையில் கூட நடக்க அனுமதிப்பது இல்லை

இதே நேரத்தில் நமது தாய் நாட்டில் இதே சூழ் நிலையைக்காண்கின்றோம். நம் நாட்டை ஐரோப்பிய கொள்ளைக் காரர்களுக்குக் காட்டிக்கொடுத்து நம் நாட்டில் உள்ளவர்களை தீண்டாதவர்கள் என்றும் சூத்திரர்கள் என்றும் மதத்தின் பெயரால் இனத்தின் பெயரால் சாதியின் பெயரால் இழிவுபடுத்திய பன்றிகளைக் காணலாம்.

தரும சாத்திரங்கள் ஆன்மீகத்தை வளர்க்க நான்கு வருணங்களையும் அவற்றின் குணங்களையும் எடுத்துக் காட்டுகின்றன. ஆனல் மனிதனை மனிதன் சுரண்டும் நிலைக்குப் பொருள் கொண்டு இந்த நாட்டின் அரசியல் பொருளாதார கலாசாரத்தை அழித்த தீய சக்திகள் பண்டிதர்களாயும், பட்டதாரிகளாயும், சீமான்களாயும் மடாதிபதிகளாயும் இருந்தனர் என்ருல் நம் உள்ளம் அனலிடு மெழுகென உருகுகின்றது. இந்தநாடு அன்னியனுக்குஅடிமையானதின்மூலகாரணம்இத்தகையகொடிய பாதகர்களால் தான்என்பதுகுன்றின்மீதுவைத்தவிளக்கு. இது விருப்.! வெறுப்பு அற்ற ஆராய்ச்சிக்கு உரியது. இத்தகைய சதித்திட்டம் முன் கூட்டியே திட்ட மிட்டு செயலில் வந்துள்ளது என்று நினைக்காமல் இருப்பதற்கு இல்லை.

1896-ஆம் ஆண்டு தன் குடும்பத்தினரை தென் ஆப்பிரிக்காவிற்கு அழைத்து வர காந்தி அடிகள் பாரத நாடு திரும்பினர். அவர் சென்னையில் நடந்த ஒரு பொதுக்கூட்

டத்தில் "வெள்ளையர் நம்மை மிருகங்கள் போல் நடத்து கின்றார்கள்." என்று குறிப்பிட்டிருக்கின்றார். தென் ஆப் பிரிக்காவில் வேலைக்காகச் சென்றவர்களில் தமிழ் நாட் டைச் சேர்ந்தவர்களே அதிகம் என்பது ஞாபகத்தில் இருக்கட்டும். இந்த நாட்டை அன்னியன் தன்னுடையது என உரிமை கொண்டாட வேண்டும். ஆனால் நம்மவர் அடிமைகளாக, கொடிய விலங்கு போல் நடத்தப்பட வேண்டும். இது தான் மனிதப்பிறவியின் தத்துவம், விதி யின் விளையாட்டு! இதுவா தருமம்! இதற்காகவா மகான் கள் தரும சாத்திரங்களை எழுதினர்! இதற்காகவா ஆண்டவன் இந்த நாட்டில் நல்லவர்களை காக்கவும் தீய வர்களை அழிக்கவும் தோன்றினது? தரும தேவதை இந்த பாதகர்களை அழித்து ஒழித்து விடும் என்பது மலை இலக்கு.

"எழு நிலை மாடம் கால் சாய்ந்து உக்குக் கழுதை மேய் பாழாகினும் ஆகும்" இது இயற்கையின் நியதி

காந்தி அடிகள் தென் ஆப்பிரிக்காவிற்குத் தன் மனைவி மக்களுடன் பம்பாய் துறை முகத்தில் கப்பலில் ஏறினார். கப்பலும் தென் ஆப்பிரிக்காவில் உள்ள டர்பன் துறை முகத்தை அடைந்தது. அதே சமயத்தில் ஒப்பந்தக் கூலி வேலைக்காக இந்தியாவிலிருந்து ஆட்களை ஏற்றிக் கொண்டு மற்றொரு கப்பலும் டர்பன் துறை முகத்திற்கு வந்து சேர்ந்தது. இந்த இரு கப்பல்களும் இந்தியா திரும்பவேண்டும் என்று கட்டளை இடப்பட்டது. இதனால் பல நாட்களாக கப்பலில் இந்தியர்கள் தங்கநேரிட்டது. பின் அனுமதி கிடைத்த பிறகு இந்தியர்கள் கப்பலி லிருந்து டர்பன் துறை முகத்தில் இறங்கினர்.

இதனை எதிர்த்து காலிகளாகிய வெள்ளையர்கள் காந்தி அடிகளை தாக்கினர். அவர் மீது கல், செங்கல் கட்டிகளை வீசினர், அவரது உடையைக் கிழித்தனர். அவரை அடித்து உதைத்தனர். "அமைதியை உண்டு பண்ணுகின்றவர்கடவுளின்குழந்தைகள்.நல்ல காரியத்தில்

நேர்மையாளர் தாக்கப்பட்டால் கடவுளால் காப்பாற்றப் படுகின்றனர்.'' (பைபிள்)

தென் ஆப்பிரிக்காவில் 1899-ஆம் ஆண்டு முதல் 1902-ஆம் ஆண்டு வரை டச்சுக் குடியேற்றக் காரர்களுக்கும் பிரிட்டிஷ் காரர்களுக்கும் சண்டை நடந்தது. தென் ஆப்பிரிக்க இந்தியர்கள் பிரிட்டிஷாருக்கு உடந்தையாக இருந்தனர். பிரிட்டிஷ் காரர்களும் வெற்றி பெற்றனர். ஆனால் சண்டைக்குப் பிறகு இரு கட்சியினரும் இந்தியர்களை துன்புறுத்து வதில் பங்கு கொண்டனர். இந்திய கூலிகளை நான்கு ஆண்டுகளில் துரத்தி விடுவோம் என்று முழுங்கினர். கூலி என்பது இந்தியரை அழைக்கும் ஒரு இழி சொல். தென் ஆப்பிரிக்காவில் சட்டத்தின் மூலம் வெள்ளையர்கள் நிறத்து வேஷத்தை வளர்த்து வந்தனர்.

1906 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 22-ஆம் தேதி டிரான்ஸவால் அரசாங்கம் ஒரு மசோதா கொண்டு வந்தது. அதன் மூலம் எட்டு வயதிற்கு மேற்பட்ட ஆண் பெண் உள்பட எல்லா இந்தியர்களும் பதிவு அத்தாட்சிப் பத்திரமும் விரல் ரேகையும் காட்டவேண்டும். அப்படிக் காட்டாவிட்டால் அபராதமும் சிறைத் தண்டனையும் அடைவர்; அல்லது டிரான்ஸ் வாலை விட்டு வெளியேற்றப் படுவர். 1907 ஆம் ஆண்டு ஜூலை 31-ஆம் தேதி ஆசியா ரெஜிஸ்டிரேஷன் சட்டம் அமுலுக்கு வந்தது. இதனை எதிர்த்ததால் காந்தி அடிகளுக்கு இரண்டு மாதம் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது.

டிரான்ஸ் வாலிலுள்ள ஓர் இந்தியன் நேட்டாலுக்குப் போய் மறுபடியும் வந்தால் குடியேற்றச் சட்டத்தை மீறியதாகும். ஒரு மாதம் முதல் மூன்று மாதங்கள் வரை சிறை வாசம் அனுபவிக்கவேண்டும்.

"நீயே ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குச் சென்றிருக்கிறாய். இதனை மற்றவன் செய்தால் அவனை தண்டிக்காதே. அவ்வாறு செய்தால் கர்த்தரால் மன்னிக்கப்பட மாட்டாய், (பைபிள்).

தம்மைச் சுற்றியுள்ள சாதாரண மக்களை வீரர்களாக வும் புத்திக் கூர்மை யுள்ளவர்களாகவும் ஆக்கக் கூடிய அதிசயமான ஆத்மீக சக்தி காந்தி அடிகளுக்கு இருந்து வந்தது. இதனால் அவர் தென் ஆப்பிரிக்காவில் நடத்திய இந்தியர்களின் உரிமைப்போராட்டம் ஆலமரம் போன்று நிலைத்துவிட்டது.

1913-ஆம் ஆண்டு மார்ச் மாதம் 14 ஆம் தேதி கேப் காலனி உயர்நீதி மன்றம் தென் ஆப்பிரிக்காவில் கிறிஸ் துவச் சடங்குப்படியும் திருமண ரிஜிஸ்டர் படியும் நடந்த திருமணங்கள்தான் சட்டப்படி நடந்த திருமணங்கள் என்று தீர்ப்பளித்தது. இந்து முஸ்லீம் பார்ஸி முறைப் படி நடந்த திருமணங்கள் சட்டத்திற்குப் புறம்பானவை ஆகும்.

இதனால் தென் ஆப்பிரிக்காவில் பல்லாயிரக்கணக் கான இந்தியர்கள் வேலை நிறுத்தம் செய்தனர். இதனால் எண்ணற்றவர் சுட்டுக் கொல்லப்பட்டனர். கல்லுக்கு அடியில் புதைக்கப்பட்டனர் இந்த நேரத்தில் ஆங்கில கவிஞன் ஷெல்லியின் கவிதை நம் கண்முன் வந்து நிற் கின்றது.

"நில்லுங்கள் நில்லுங்கள் கைகளைக் கட்டிக்கொண்டு காட்டுமரம்போன்று; நில்லுங்கள் வாய்பேசாமல்; அமைதி யும் உறுதியும், தோல்வி இல்லா போரின் ஆயுதங்கள். கொடுங்கோலர்கள் தங்கள் குதிரைகளில் ஏறி நம்மிடை நுழைந்து அமுக்கட்டும், குத்தட்டும், அங்க ஈனப் படுத்தி வெட்டி வீழ்த்தட்டும்; கைகளை கட்டிக்கொண்டு அச்ச மின்றி நில்லுங்கள்."

இதே சமயத்தில் பைபிளின் பொன்மொழிகளைப் பார்ப்போம்:

"பழம் காலத்தில் இருந்தே சொல்லப் படுகின்றது நீ யாரையும் கொலைசெய்யாதே என்று. அவ்வாறு செய் தால் ஆண்டவனால் தண்டிக்கப்படுவாய்."

ஐரோப்பியர்கள் பைபிளின் பொன் மொழிகளை மறந்தனர். கருணை வடிவாகிய கர்த்தரை சிலுவையில் அறைந்த காட்சியினைக் கண்டு மகிழ்ந்தனர். மனிதர் நிலையிலிருந்து மிருக நிலைக்குச் சென்றுவிட்டனர். ஆனால் கர்த்தரின் ஆவி இவர்களை சும்மா விடுவதற்கு இல்லை. இவர்களுக்கு மன்னிப்பும் இல்லை.

இந்நேரத்தில் தமிழ் நாட்டில் நெல்லை மாவட்டத்தை நோக்குவோம். ஷெல்லியின் கவிதையில் உள்ள கொடுங் கோலனுகை நெல்லை ஜில்லா கலெக்ட்டராக ஒரு கொள்ளைக் காரன் இருந்தான். இவன் கிளைவ் முதலிய கொள்ளைக் காரர்களுக்கு ஒப்பானவன். இவன் பெயர் ஆஷ். ஆங் கிலத்தில் இந்த பெயருக்கு சாம்பல் அல்லது கழுதை என்று பொருள். இவனும் இத்தகைய நிலையை அடைய வேண்டியவன். கர்த்தரின் பொன்மொழிகளை தீயினுக்கு இரையாக்கி விட்டு நாட்டுப்பற்றும் நன் மொழிப் பற்றும் கொண்ட தேச பக்தர்களின் உடம்பில் பழுக்க காய்ச்சிய வேலினை பாய்ச்சிக் கொல்லாமல் கொன்று வந்தான். அவன் செய்த கொடுமைகளுக்கும், கொள்ளைகளுக்கும், கொலைகளுக்கும், சட்டம், ஒழுங்கு, நீதி, என்று வடிவம் கொடுத்து வந்தனர். அவன் செய்த கொடுமைகளுக்கோ எல்கை இல்லை. மக்கள் தாங்கொணுத் துயரம் அடைந் தனர்

ஆறுயிரம் மைலுக்கு அப்பால் உள்ள ஒரு சிறுபகுதி யில் வாழ்கின்றவன், தமிழ் நாட்டின் பரப்பிற்கும் மக்கள் தொகைக்கும் பத்தில் ஒரு பங்கு கூட இல்லாத ஒரு கொள்ளைக் கூட்டம், இந்த நாட்டில் ஆட்சி செலுத்து கின்றது என்ருல் இதற்கு உடந்தையாக இருந்தவர்கள் பேய்களாகத்தான் இருந்திருக்க வேண்டும்.

கடவுளின் அன்பிற்குப் பாத்திரமானவர்கள் பூதங் களுக்குப் பயப்படமாட்டார்கள், உண்பதும் உறங்கு வதும் பெரிதென கொள்ளார். நல்ல காரியத்திற்காக தனது உடல் பொருள் ஆவி அனைத்தும் பலியிடுவர். இதனால் நிலையான புகழை அடைந்து விடுகின்றனர்.

கொள்ளைக்கார ஆஷ் கொடுமைகள் தலை விரித்து ஆடின. இதற்கு முற்றுப் புள்ளி வைக்க இக்கொடியவன் மணியாச்சி இரயில் நிலையத்தில் சுட்டுக் கொல்லப்பட்டான். ஆயுதம் இல்லா மக்களுக்கு ஆயுதம் தாங்கிய கொள்ளைக் கூட்டத்தினால் இன்னல் ஏற்படாமல் இருக்க தன்னையும் சுட்டுக்கொண்ட தியாகி 'வாஞ்சிநாதனை' தமிழகம் மறப்பதற்கு இல்லை. மிருகத்தனமாக தூக்கில் இடப்பட்டு கொலைசெய்யப்பட்ட பாஞ்சாலம் குறிச்சி மன்னன் வீரபாண்டிய கட்டபொம்மனின் ஆவியே வாஞ்சி நாதனாகத் தோன்றி அதர்மத்தை ஒடுக்கி இருக்கிறது.

"கண்ணுக்கு கண், பல்லுக்குப்பல், பிடுங்க வேண்டும் என்பர். இது சிறந்தது அல்ல. உனது வலது கன்னத்தில் அறைந்தால் இடது கன்னத்தைக்காட்டு" என்று பைபிள் கூறுகின்றது. ஆனால் ஐரோப்பியர்கள் இதனை மறந்து விட்டனர்.

இந்நேரத்தில் இந்த புனித மண்ணில் பல ஆண்டுகளுக்கு முன் நடந்த கொடிய சம்பவத்தைக்காண பின் நோக்கிச் செல்வோம்.

மணியாச்சிக்கு அருகில் பாஞ்சாலம் குறிச்சி நாடு இருக்கின்றது. இந்நாடு பல கிராமங்களைக் கொண்டது. இந்த நாட்டில் வீர பாண்டிய கட்ட பொம்மன் என்ற சிற்றரசர் ஆண்டு வந்தார். அவரது தம்பியின் பெயர் ஊமைத்துரை. இருவரும் சிறந்த வீரர்கள், நேர்மையாளர்கள், தன்மானம் உள்ளவர்கள். இவர்கள் திருச்செந்தூர் முருகனின் மீது மிகவும் பக்தி கொண்டவர்கள். பாஞ்சாலம் குறிச்சி நாட்டின் குல தெய்வம் பராசக்தி சக்கம்மாதேவி ஆகும்.

ஆங்கில கும்பனியாருக்குக் கப்பம் கட்ட வில்லை என்று பாஞ்சாலம் குறிச்சி, செக்காரக்குடி கோட்டைகளை கும்பனியார்கள் பீரங்கிகளைக் கொண்டு இடித்து தள்ளினர். பாஞ்சாலம் குறிச்சி வீரர்களை கொன்று குவித்திருக்கின்றனர். இளைய மன்னர் ஊமைத்துரையைப்

புதுக்கோட்டையிலும், மன்னர் வீர பாண்டியயரை கயத் தாற்றிலும் தூக்கில் இட்டு கொன்று விடடனர். இந்த நாட்டையும் கொள்ளை கொண்டனர். இதை விட கொடிய துரோகமும் வஞ்சகமும் வேறு இருப்பதற்கு இல்லை.

தமிழ் நாட்டின் வீரத்திற்கும் தியாகத்திற்கும் புகழ் பெற்றது திருநெல்வேலி மாவட்டம் ஆகும். அதிலும் கோவில் பட்டி கோட்டத்திற்கு உட்பட்ட இடம் தனிச் சிறப்பு வாய்ந்தது. இதனையே இந்திய சுதந்திர போராட் டத்திற்கு முதலாவது கள பலி என்றுதான் கூற வேண்டும். இங்குதான் கப்பலோட்டிய தமிழர் திரு. வ. உ. சிதம்பரனார் தோன்றினார். இந்திய நாட்டிலே தேசிய கவிஞர் எனப் போற்றிக் கொண்டாடப்படும் தேசிய கவிஞர் சுப்பிரமணிய பாரதியார் பிறந்தார். வீர ரும் தியாகியுமான, தாயகத்திற்குஅழியாப்புகழைத்தேடித் தந்த மன்னர்கள் வீரபாண்டிய கட்ட பொம்மனும் ஊமைத்துரையும் அவதரித்தது இந்த பொன் நாட்டில் தான்.

ஐரோப்பியர்கள் இந்த நாட்டில் வியாபாரத்திற்காக வந்தவர்கள். இவர்கள் இந்த நாட்டு மன்னர்களை கொன்று, இந்த நாட்டு மக்களை சுட்டுத்தள்ளி, இந்த நாட்டின் செல் வத்தை கொள்ளை அடித்தனர் என்றால் எத்தகைய கொடிய வஞ்சகச்செயல் என்று அளவிட்டுக் கூறுவதற்கு இல்லை.

ஆடுமாமலையின் உச்சியில் இருந்து தியாகத்தின் சின்னம் கர்த்தரின் பத்து ஆணைகள் வெளி வந்தன. சிலு வையைத் தாங்கும் ஐரோப்பியர்கள் இதனை தீயினுக்கு இரையாக்கி ஏகாதிபத்தியத்தை, கடல் ஆதிக்கத்தை காலனி ஆதிக்கத்தை நிலை நாட்டி,யுள்ளனர் என்றால் மகான் கர்த்தரின் ஆவி இவர்களை சும்மா விட்டு விடும் என்று சொல்வதற்கு இல்லை.

"இயற்கையின் சட்டத்தையும் தியாகிகளையும் அழிக்க வந்த தாக நினைக்க வேண்டாம். அழிப்பதற்காக

வர வில்லை. அதனை காக்க, நிறைவேற்ற வந்திருக்கிறேன்" (பைபிள்)

குணங்களின் தன்மையைக் கூற வந்த பகவத் கீதை ரஜோகுணம் அதிகரித்திருக்கும் பொழுது சாத்வீகமும் தமோகுணமும் குன்றி விடுகின்றது என்று கூறுகின்றது.

1914–ஆம் ஆண்டு முதலாவது உலக யுத்தம் ஆரம்பித்தது. கடல் ஆதிக்கமும் காலனி ஆதிக்கமும் கொண்ட பிரிட்டானியருக்கும் ஜெர்மானியருக்கும் நடந்த போராட்டம் இது. உலக மக்களுக்குப் பொதுவான நீர் பரப்பையும் நிலப்பரப்பையும் தங்களுடையதென பிரிட்டன் கொள்ளை கொண்டதால் ஏற்பட்ட போராட்டம் ஆகும். இச்சண்டைக்கும் பாரதத்திற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. ஆனால் பிரிட்டன் பாரதத்தின் உடைமை எல்லாம் தனது எனக்கொண்டு இந்த யுத்தத்தில் இறங்கியது.

ருஷ்யாவில் சார் மன்னரை எதிர்த்து லெனினும் ஸ்டாலினும் புரட்சி செய்தது இந்தக் காலத்தில் தான். இதில் வெற்றியும் கண்டனர்.

இந்தியாவில் நல்லதோர் ஆட்சியை அமைதியான முறையில் நிலை நாட்ட இந்திய தேசிய காங்கிரசு விரும்பியது. இதனல் யுத்தத்தில் பிரிட்டனுக்கு ஆதரவாக இருந்தது. 1914–ஆம் ஆண்டு தென் ஆப்பிரிக்காவிலிருந்து தம் குடும்பத்துடன் காந்தி அடிகள் பாரதம் திருப்பினர். காந்தி அடிகளும் இந்திய தேசீய காங்கிரசும் ஆதரவு தந்த தால் நாட்டின் செல்வ மெல்லாம் பிரிட்டனுக்காகச் செல விடப்பட்டன. பல்லாயிரக் கணக்கானவர்கள் பட்டாளத்தில் சேர்ந்தனர். ஆயிரக் கணக்கானவர்கள் யுத்தத்திற்குப் பலி ஆயினர்.

சண்டை முடிந்ததும் பிரிட்டன் நய வஞ்சகத்தையும் கொள்ளை கொலைபுரியும் செயல்களையும் மறந்து விட வில்லை. அகில இந்திய காங்கிரசிற்குக் கொடுத்த வாக்குறுதி நிறை வேறறப்பட வில்லை. 1919-ஆம் ஆண்டு

மார்ச் மாதம் 18-ஆம் தேதி தில்லி ஏகாதிபத்தியம் ரவுலத் சட்டத்தை அமுலுக்கு கொண்டு வந்தது. யுத்த கால அடக்கு முறை மீண்டும் தாண்டவமாயின. ராஜத் துரோகம், கிளர்ச்சி முதலிய குற்றங்கள் என்று கூறி தேசியத் தலைவர்களை கைது செய்தனர், நீதி மன்றங்கள் தண்டனை விதித்தன. பொதுக்கூட்டங்களுக்கு தடை விதிக்கப்பட்டது. தேசத்துரோகி என்று கூறி குற்ற மற்றவர்களை கைது செய்தனர்.

புரட்சி இயக்கத்தைச் சேர்ந்த புகழ் பெற்ற தேசிய வாதியான சாவர்கர், பாலகங்காதர திலகர்; வ. உ. சிதம் பரனார், சுப்பிரமணிய பாரதியார் முதலியவர்கள் காரா கிரகத்திலே அடை பட்டு ஒடுக்கப்பட்டனர். வ. உ. சிதம் பரனார் செக்கு இழுத்தார், கல் உடைத்தார். கன்னனூர் சிறையில் அத்தியாக தீபம் பட்ட இன்னல்களை பழம் பெரும் தேச பக்தர் பரலி சு. நெல்லையப்பர் சித் தரிக்கிறார். அதில் சைவ உணவு முகமதிய ஆக்குப்பறை யிலிருந்து ஆக்கப்பட்டு கொடுப்கப்பட்டதை நெஞ்சு உருகி கூறுகின்றார்.

இந் நிலையில் நம் நாட்டினரைநாம்சற்று சிந்திப்போம். நீதி நேர்மை என்று ஆறாயிரம் மைலுக்கு அப்பாலுள்ள வெள்ளையர்களுக்கு இந் நாட்டை ஏன் காட்டிக்கொடுக்க வேண்டும்? உயர்ந்த சாதி என்றும் தாழ்ந்த சாதி என்றும் ஏன் கற்பனை செய்து கொள்ள வேண்டும்? இதனை மதவாதிகளும் அறிவாளிகளும் சிந்திக்கவேண்டும். ஆனால் இவர்கள் அன்னியனுக்கு இந் நாட்டைக் காட்டிக் கொடுத்தனர்களே அல்லாது தமது கடமையைச்செய்ய முன் வர வில்லை. இவர்களை தெய்வத் துரோகிகள், நாட்டுத் துரோகிகள் என்று தான் கூற வேண்டும். இரக்கம் அற்ற நிலையில் மக்களை சுட்டுத் தள்ளியுள்ளனர் ஆட்சியில் உள்ளவர்கள். நம் நாட்டு மக்களைச் சுட நம் நாட்டில் உள்ளவர்களே தயாராக இருக்கின்றனர், நம் நாட்டில் உள்ள நீதி மன்றங்கள் தீர்ப்பளிக்க தயாராக இருக்கின்றன, நம் நாட்டில் உள்ள படித்த ஆங்கில

மேதைகள் நாட்டின் செல்வம் எல்லாம் கொள்ளையிடத் தயாராக இருக்கின்றனர் என்றால் இந்தநாட்டில் மயானத்தில் தோன்றும் அமைதியைத்தான் இந்த கொடிய பாதகர்கள் நிலை நாட்டி இருக்கின்றனர் என்பது வெள்ளிடைமலை. இதனையே வங்க கவிஞர் இரவிந்தரநாத தாகூர் மனம் நொந்து பாடுகின்றார்.

பஞ்சாப் மாநிலத்தில் அமிருதசரஸ் என்ற பட்டணம். அதில்ஜாலியன்வாலாபாக் என்றஓர்மைதானம். 1919—ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பதின்மூன்றாம் தேதி ஓர் பொதுக் கூட்டம் நடக்க ஏற்பாடாயிருந்தது. அது ஒரு நீண்ட சதுர வெட்ட வெளி. அதைச்சுற்றிலும் மதில் சுவர்கள். அதற்குப் போகவர சில வழிகள் உள்ளன. சதுக்கத்தில் ஏராளமான மக்கள் கூடி இருந்தனர். ஒரு உயர்ந்த மேடையில் இருந்து ஒரு தேச பக்தர் மக்களின் கடமைகளைப்பற்றி எடுத்துக் கூறிக்கொண்டிருந்தார்.

இத்தருணத்தில் டையர் என்ற கொள்ளைக்காரன் கொலைகாரர்கள் அடங்கிய ஆயுதம் தாங்கிய இரண்டு இராணுவ வண்டிகளுடன் அங்கு வந்தான். டையர் சதுக்கத்திற்குள் சென்று எல்லா பக்கத்திலும் துப்பாக்கிக் காரர்களை நிறுத்திவைத்தான். சதுக்கத்திலிருந்து வெளியே செல்ல வேண்டிய வழிகளிலும் இராணுவத்தினரையும் இராணுவ வண்டிகளையும் நிறுத்திக்கொண்டான். உத்திரவை மீறி கூட்டம் நடத்தியதால் கூட்டத்தை நோக்கிச் சுடும்படி உத்திர விட்டான். அதில் உள்ள பைத்தியக்கார நேபாள கூர்க்காக்களும் பலிசிஸ் தானிகளும் சுட மறுத்திருக்க வேண்டும், அல்லது கொள்ளைக்காரன் டையரை சுட்டு வீழ்த்தி இருக்க வேண்டும். ஆனால் அவர்கள் தாய் நாட்டிற்குத் தலை வணங்கத்தயாராய் இல்லை; தாய் நாட்டை மயான மாக ஆக்க தயங்க வில்லை.

சுட ஆரம்பித்ததும் கூட்டம் கலைய ஆரம்பித்து விட்டது. ஆயிரக்கணக்கனவர்கள் கொல்லப்பட்டனர்.

பல்லாயிரக் கணக்கானவர்கள் காய மடைந்தனர். இந்த படுகொலையை மனதில் கொண்டோமானால் பிரிட்டனில் உள்ள மக்கள் அனைவரையும் மண்ணோடு மண்ணாக ஆக்க அந்த நாட்டை ஜலவாயு குண்டுகளால் அட்லாண்டிக் மகா சமுத்திரத்தின் அடியில் தள்ள வேண்டு மென்ற எண்ணம் தோன்றாமல் இருப்பதற்கு இல்லை. நாட்டில் கொள்ளையும் கொலையும் செய்வதற்காக இராணுவத்தை யும் நவீன யுத்த தளவாடங்களையும் கொண்டு அரசாங்கம் என்ற பெயரில் இயங்கும் அசுர சக்தி அழிந்து ஒழிந்து விடும் என்பது திண்ணம்.

மூன்று உலகத்தையும் அடக்கி ஆளும் இலங்கை மாநகரை எத்தனை காலம் காக்க வேண்டும் என்று சர்வ சக்தி வாய்ந்த அதன் காவல் தெய்வம் 'இலங்கினி' சிவபெருமானை கேட்கின்றாள். ''முயன் வலி குரங்கு ஒன்று கைத்தலம் அதனால் குத்தி உயிர் பிரியும். பின் சித்திர நீகரும் சிதைவது திண்ணம்,'' என்றுபதில் கூறப் படுகின்றது. இது பிற்காலத்தில் தோன்றிய அணுகுண்டு களையும் வான்வெளிப் பயணத்தையும் ஏவுகணையையும் முன் கூட்டியே குறிப்பிடுகின்றது.

"கனவினிலும் இன்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு"

இந்த நாட்டில் அடிமை ஆட்சிக்குக்காரணம் இந்தி யன் சிவில் சர்வீஸ் ஆகும். இதில் பணி ஆற்றியவர்கள் நாட்டுத் துரோகிகளாயும் தெய்வத் துரோகிகளாயும் இருந்திருக்கின்றனர். இவர்களால் தான் இப்புண்ணிய பூமி விடுதலை தவறிக்கெட்டு பாழ்பட்டு வையத்து நாட்டில் எல்லாம் தாழ்வுற்று தன் நிலை குன்றி விட்டது.

துரியோதனின் அவையில் பாஞ்சாலியின் துகில் உரியப்படுகின்றது. வீரர்களாகிய பஞ்சவர்கள் கண்ணீர் விடுகின்றனர். மந்திரிகளும் பிரதானிகளும் மகான்களும் அவையில் இருக்கின்றனர். பாஞ்சாலி கதறி அழுகின்றாள்,

பரந்தாமன் கண்ணனை நினைக்கிறாள். துகில் உரிய உரிய நீண்டு கொண்டே இருந்தது. தருமம் வென்றது அதர்மம் தோற்றது. இது போன்று கொடிய வன்செயல்கள் புரிந்தும் இந்திய விடுதலை இயக்கத்தை அழிக்க முடிய வில்லை. விடுதலை இயக்கம் பேரிடி என முழங்க ஆரபித்து விட்டது

1921-ஆம் ஆண்டு காந்தி அடிகள் சாத்வீக சட்ட மறுப்பை பர்தோலியில் ஆரம்பித்தார். பிரபல வழக்கு அறிஞர்களாகிய சர்தார் வல்லபாய் பட்டேல் விட்டல் பாய் பட்டேல், பெரும் தனக்காரர் ஜம்னுலால் பஜாஜ் கோகலே முதலியவர்கள் போராட்டத்தில் குதித்தனர். ஐக்கியமாகாணத்தில் உள்ள சௌரி சௌரா என்ற இடத் திலும் பிரபல வழக்கறிஞர் பண்டித மோதிலால் நேரு பண்டித மாளவியா முதலியவர்கள் முன்நின்று நடத்தினர் கள். சுபாஸ்சந்திர போஸ்,பண்டித ஜவகர்லால் நேரு மற் றும் மேலே நாட்டுப்பட்டம் பெற்ற இளைஞர்களும் விடுதலை இயக்கத்தில்குதித்தனர். பிகாரில்பாபு இராஜேந் திர பிரசாத், வங்கத்தில் அரவிந்த கோஸ். சுரேந்தர நாத் பானர்ஜி, பங்கிம் சந்திரர், சரத் சந்திர போஸ், சி. ஆர். தாஸ், சென்குப்தா முதலிய பிரபல வழக்கறிஞர்களும் எழுத்தாளர்களும் விடுதலைப்போரில் தீவிரமாகப் பங்கு கொண்டனர். பொது மக்களின் ஆதரவு நாடு எங்கும் நிறைகுட மென பொங்கி வழிந்து கொண்டிருந்தது.

தமிழ் நாட்டில் சாத்வீக சட்ட மறுப்பு இயக்கம் காட்டுத் தீ என பரவத் தொடங்கி விட்டது. புரட்சி கவிஞர் சுப்பிரமணிய பாரதியாரின் தேசிய கீதம் விண் ணும் மண்ணும் அதிரும்படி ஒலித்தது. சென்னை, திருச்சி, சேலம், கோவை, மதுரை, நெல்லை முதலிய முக்கிய இடங் களிலெல்லாம் பிரபல வழக்கறிஞர்களும் பெரு நில கிழார் களும் முன் நின்று சட்ட மறுப்பு இயக்கத்தை நடத்த தயங்க வில்லை.

"எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவியது
இந் நாடே—அவர்
முந்தையர் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்
ததும் இந்நாடே அதை
வந்தனை செய்து மனதினில் இருத்தி வாயார
வாழ்த்தேனோ அதனை
வந்தே மாதரம் என்று வாழ்த்தி வணங்கேனோ"

என்று நாட்டு விடுதலைப்போர் உச்சக்கட்டத்தை அடைந்து விட்டது.

தமிழ் நாட்டில் தேசிய இயக்கத்தை நசுக்க தனி ஆயுதப் படையை வைத்திருக்கின்றனர். இவர்களில் பெரும்பாலும் மலையாளத்தைச் சேர்ந்தவர்கள். இவர்களுக்கு இடும் கட்டளை, அடி, உதை, மிதி, சுடு, கண்ணீர் புகைகளை வீசு முதலியன. இவர்கள் நாட்டில் மக்களிடம் இருந்து வசூலிக்கப்பட்டவரியினால் வாழ்பவர்கள்; பிரிட்டனிலிருந்து கொண்டுவரப்பட்டு இவர்கள் ஊட்டிவளர்க்கப்படவில்லை. இந்த நாட்டில் காகித செலாவணியை வைத்து ஏமாற்றி இந்நாட்டில்உள்ள தங்கத்தையும்மூலப் பொருள்களையும் கப்பல் கப்பலாக கொள்ளைகொண்டு செல்லும் பிரிட்டிஷ்காரர்களுக்காக எத்தகைய கொடுமைகளும் செய்ய இவர்கள் தயங்கவில்லை. இதே கொடுமைகளை நீதி மன்றங்களும், சிவில் இலாகாக்களும், சமஸ்தானாதிபதிகளும் செய்து வந்தனர்.

"வேலொடு நின்றான் இடு என்றது போலும்
கோலொடு நின்றான் இரவு"

தேசிய இயக்கம் தெய்வத்தின் கட்டளை என மக்களின் உள்ளத்தை கவர்ந்து விட்டது. ஆனால் போலி மடாதிபதிகளின், ஆணவம் மிகுந்த படித்த மேதைகளின் வஞ்சக பட்டதாரிகளின், கல் மனத்தை உருகச் செய்ய முடியவில்லை. இப் பன்றிகளைப் பற்றி நமக்கு கவலை இல்லை. தன் உடல் பொருள் ஆவி மூன்றையும் காணிக்

கையாகயிட பிரபல வக்கீல்களும், தொழில் அதிபர்களும், எழுத்தாளர்களும், பத்திரிகை ஆசிரியர்களும், பெருநிலக் கிழார்களும் நாட்டுப் பற்றும் நன் மொழிப்பற்றும் கொண்டு விடுதலை இயக்கத்தில் கலந்து கொண்டனர். உழைப்பாளிகளும், தொழிலாளர்களும் வெள்ளம்போன்று விடுதலை இயக்கத்தில் கலந்து விட்டனர்.

நாட்டில் பல இடங்களில் தியாகிகள் அடிபட்டனர், உதை பட்டனர், சிறைகளில் தள்ளப்பட்டனர். சுட்டு வீழ்த்தப்பட்டனர். இந்தியாவின் பிரதமராக இருந்த பண்டித ஜவகர்லால் நேரு, பாரிஸ்டர் பட்டம் பெற்றும் பெரும் செல்வந்தராக இருந்தும் சாதாரண ஜவானின் கைத் தடியினுல் தாக்குண்டு இரத்தம் ஓடுவதை பொருட் படுத்தவில்லை என்ருல், இந்திய தேசிய ராணுவ தளபதி என்ற அஞ்சா நெஞ்சு படைத்த சுபாஸ் சந்திரபோஸ் இந்தியன் சிவில் சர்வீஸ் பதவியிலிருந்து நீங்கி தாய் நாட்டிற்காக எத்தகைய தியாகமும் செய்ய முன்வந்தார் என்ருல், தேச பக்தி என்பது எவ்வளவு புனிதமானது என்பது சொல்லும் தரமன்று.

பிரிட்டிஷாரின் கொடிய அடக்கு முறையினை சாத்வீக போராட்டத்தினுல் எதிர்த்த தியாகிகள் படும் எல்லையற்ற துன்பத்தை காணச் சகியாது நாட்டில் விடுதலை இயக்கம் இமயம் முதல் குமரிவரை பம்பாய் முதல் கல்கத்தாவரை எரிமலை அன்ன ஓங்கி விட்டது. தலைவர்களை எல்லாம் சுட்டுக்கொன்று விட்டால் என்ன செய்வீர்கள் ? என்று கேட்கலாம். இது மிகவும் மட்டரகமான மனித நிலையிலிருந்து விலகிய மிருக புத்திபடைத்தவனின் கேள்வியாகும். தலைவர்கள் கொல்லப் பட்டால் இயக்கம் வீறுகொண்டுஎழும் என்பதனை இந்த மனித மிருகத்திற்கு உணரும் பகுத்தறிவு இல்லை. ஒரு நாட்டை அழிக்கலாம். அந்த நாட்டில் ஆட்சி செலுத்தமுடியாது. ஒன்று இரண்டு ஆண்டுகளில் புரட்சி ஏற்பட்டு நாட்டுத் துரோகிகளும் வஞ்சகர்களும் பாதகர்களும் சுட்டு வீழ்த்தப்படுவர். கடந்த கால இங்கிலாந்து சரித்திரமே இதனைக்கூறும்.

1921-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 19-ஆம் தேதி யங் இந்தியாவில் காந்தி அடிகள் கட்டுரை ஒன்று எழுதினர். "போர் வீரர் ஆகவோ, சாதாரண நிர்வாக அதிகாரியாகவோ இந்த அரசாங்கத்தில் பணிபுரிவது பாபம் என்று நான் சொல்லத் தயங்கமாட்டேன்" என்று அதில் குறிப்பிட்டார். இதற்காக இந்தியாவின் தந்தை என்று பெரிதும் மதிப்பிற்கு உரிய காந்தி அடிகளின்மீது ராஜத் துரோகம் என்ற குற்றம் சாட்டப்பட்டு ஆறுவருட சிறை தண்டனை வழங்கப்பட்டது.யாருக்குயார் ராஜத்துரோகம் செய்கின்றனர். இதனை நிலைநாட்ட இந்திய சட்டங்களும் நிர்வாக முறை அமைப்பும் நீதி மன்றங்களும் இருக்கின்றன என்றால் இவற்றை நாட்டுத் துரோகம் என்று கூறாமல் வேறு என்ன என்று சொல்வது. 1922-ம் ஆண்டு மே மாதம் 19ம்தேதி அலகாபாத் நீதி மன்றத்தில் "இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியை நான் ஏற்றுக்கொள்ள முடியாது" என்று பண்டித நேரு முழங்கினர். இப்பெருந்தகை அல்லவோ வீரமும் நுண்ணிய அறிவும் பெற்ற பேரறிவாளர். சர் பட்டமும் டாக்டர் பட்டமும் பெற்ற போலி பண்டாரங்களை, புலித்தோல் போர்த்திய கழுதைக்குத்தான் ஒப்பிடவேண்டும்.

"கான முயல் எய்த அம்பினில் யானை
பிழைத்த வேல் ஏந்தல் இனிது"

பிரிட்டிஷ்கரரர்கள் இந்த நாட்டில் கொள்ளை அடிப்பதற்காகவும் அடிமை ஆட்சியை நிலை நாட்டுவதற்கும் பயங்கரத்தையும் பலாத்காரத்தையும் உபயோகித்தனர்; மக்களிடம் உள்ள சகல சக்திகளையும் அபகரித்துக் கொண்டனர்.

மக்கள் வலி இழந்து தன் நிலை குன்றினர். தங்களைப் பாதுகாக்கவும் வன் முறைகளை எதிர்க்கவும் மக்களால் முடியவில்லை. இதற்கு உடந்தையாக இருந்த கயவர்கள் அமெரிக்காவிலோ, ஐரோப்பாவிலோ இருந்திருப்பர் என்றால் இவர்கள் பூண்டோடு அழிக்கப்படுவர்.

பிரஞ்சு புரட்சியும், அமெரிக்க புரட்சியும், ருஷ்ய புரட்சியும் இதற்கு எடுத்துக்காட்டும். ஆனால் இத்தகைய கொடிய பாதகர்கள் இந்நாடு விடுதலை அடைந்தபின்னும் அதி உன்னத நிலையில் இருந்து கொண்டு விருதும்பெற்று வாழ்கின்றனர் என்றால் விந்தையாகவே இருக்கின்றது என்று கூறாமல் இருப்பதற்கு இல்லை.

நாட்டில் தேச பக்தி தெய்வ பக்தியுடன் கலந்து உறவாட ஆரம்பித்த தருணத்தில் தான் பங்கிம் சந்திரர் வந்தே மாதரம் கீதம் பாடினர் வங்கக் கவிஞர் இரவிந்திரநாத் தாகூர் 'ஜனகணமன' என்று ஆரம்பிக்கும் இன்று தேசிய கீதம் என ஏற்றுக்கொள்ளப் பட்ட தேசிய கீதத்தைப் பாடினர். இந்தியாவின் சுகதுக்கத்தை நிர்ணயிக்கும் அன்னை பராசக்தி பாரத தேவியின் புகழ் மக்கள் இதயத்தில் ஆட்சி செலுத்த ஆரம்பித்து விட்டது. தேவியின் திருநாமம் பஞ்சாப், சிந்து கூர்ஜாம், மகாராஷ்டிரம் திருவிடம், உத்கலம், வங்கம்எங்கும் உள்ளக் கிளர்ச்சி அடைய செய்து விட்டது. அது விந்திய இமாசலத்தில் எதிர் ஒலித்தன. யமுனை கங்கையின் இன்ப நாதத்தில் கலந்தன. இந்தியக் கடல் அலைகளால் அர்ச்சனை செய்ய ஆரம்பித்துவிட்டன.

தமிழ் நாடு தேச பக்தியில் முந்திக் கொண்டதுடன் தேசிய கவியையும்உண்டாக்கியபெருமைஅளவிடற்குஅரியது. மேலும் தமிழ் நாட்டில் தேசிய போராட்டம்தெய்வத் தமிழுடன் கலந்துஇறைஇன்பத்தைபெற்றுவிட்டது.பாரத நாட்டின் பெருமைக்கும் புகழுக்கும் மூல காரணம் தமிழ் நாடும் தமிழ் மொழியும்தான். தெய்வத் தமிழ் மொழி தோன்றி பல ஆயிரம் ஆண்டுகள் ஆகின்றன. அதி உன்னத இலக்கியங்களைப் பெற்றது. இறைவனால் தமிழ் சங்கம் ஏற்படுத்தப்பட்டு போற்றிக் கொண்டாடப்பட்டது. இந்தியாவின் சுகதுக்கத்தை நிர்ணயிக்கும் பாரததேவி, அங்கயற்கண்ணியாக, மீனாட்சி சுந்தரியாக, தமிழ் தெய்வமாக,அருள் பாலிக்கின்றாள். இத்தகைய பெருமை சமஸ்கிரதத்திற்கும் பாரதநாட்டில் உள்ள வேறு எந்தமொழிக்கும் இல்லை.

"நீலத் திரைக் கடல் ஓரத்திலே நித்தம்
தவம் செய்யும் குமரி எல்கை
வடமா லவன் குன்றம் இவற்றிடையே
புகழ் மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு"

தமிழ் நாட்டில் தெய்வ மணம் கமழ்வதை இப்பாடல் காட்டுகின்றது. அத்துடன் நமது தேசிய கவிஞர் சுப்பிரமணிய பாரதியார் விட்டுவிடவில்லை. "தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா" என குழந்தைகளுக்கும் வீரத்தை ஊட்டுகின்றார். நம் உள்ளத்திலும் நாட்டுப் பற்றும் நன்மொழிப் பற்றும் வெள்ளப் பெருக்கெடுத்து ஓடுகின்றது. ஆனால் வஞ்சகர்களும் கொடிய பாபிகளும் தமிழ் நாட்டை திராவிட நாடு என்று தமிழ் மொழியை திராவிட மொழி என்றும் இழிவு படுத்தி சமஸ்கிரதத்தை ஆரிய மொழி என்றும் வடநாட்டினரையும் தமிழ் நாட்டில் உள்ள போலி பிராமண வாதிகளையும் ஆரியர்கள் என்றும் நிலைநாட்டியுள்ளனர். இது ஆராய்ச்சிக்கு உரியது.

# 4

# தாயின் மணிக் கொடி

"இதம்தரும் மனைவி நீங்கி இடர்மிகு சிறைப்பட்டாலும்
சுதந்திர தேவி நின்னை தொழுதிட மறக்கிலேனே"

திருப்பூர் கோயம்புத்தூர் மாவட்டத்தில் ஒருமுக்கிய வியாபார தலம். இதனை தென் நாட்டின் மான்செஸ்டர் என்று கூறுவர். நூற்றுக்கணக்கான பஞ்சுக் கிடங்குகள் இங்குதான் இருக்கின்றன. கோயம்புத்தூரைச் சுற்றி முப்பதுக்கு மேலாக நூல் ஆலைகள் உள்ளன. இவற்றிற்கு வேண்டிய பஞ்சு திருப்பூரில்தான் பெரும்பாலும் கிடைக்கின்றது.

தமிழ் நாடு எங்கும் தேசிய உணர்ச்சி மக்களிடையே கட்டுக் கடங்காத நிலையில் இருந்து வந்தது. ஊர் வலங்களுக்கும் பொதுக் கூட்டங்களுக்கும் தடை விதித்தனர். இதனை எதிர்த்து தொண்டர்களும் தேசிய தலைவர்களும் ஊர்வலம் நடத்துகின்றனர், பொதுக்கூட்டங்கள் நடத்துகின்றனர். அன்று ஒருநாள் திருப்பூரில் தியாகி குமரன் இராட்டை பொறிக்கப்பட்ட மூவர்ண கொடி பிடித்துக் கொண்டு பல தொண்டர்களுடன்,

“ தாயின் மணிக்கொடி பாரீர்—அதை
தாழ்ந்து பணிந்திட வாரீர்
தாயின் மணிக்கொடி பாரீர்”

என்ற பாடலை பண்ணுடன் பாடிக்கொண்டு தெருவில் வருகின்றார். எங்கும் ஆயுதம் தாங்கிய மலபார் ஸ்பெஷல் போலீஸ் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கின்றது. பள்ளிக் கூடங்களும் கடைகளும் மூடிக் கிடந்தன. ஆயிரக் கணக்கான மக்கள் ஊர்வலத்தில் கலந்து கொள்ளமுன் வந்தனர்.

திடீரென்று ஊதல் சத்தம். கூட்டத்தை நோக்கி வெறிபிடித்த நாய்கள்போன்று மலபார் ஸ்பேஷல் போலீஸ் பாய்ந்தனர், அடித்தனர், காலால் உதைத்தனர். தியாகி குமரனின் கையில் உள்ள தேசிய கொடியை பிடுங்க முயன்றனர். உடும்புப் பிடிபோல் பிடித்து இருந்ததால் முடியவில்லை. குமரனின் மண்டையில் பலமாக அடித்தனர். காலால் உதைத்தனர். உயிர்போகும் வரை கொடியை விடவில்லை. கடைசியில் இத் தியாகியை ரத்த வெள்ளத்தில் மூழ்கச் செய்து கொன்றுவிட்டனர், தாயின் மணிக்கொடியும் ரத்தத்தில் மூழ்கியது. தென் இந்தியாவின் மான்செஸ்டர் திருப்பூர் தியாகி குமரனால் அழியாப் புகழ் அடைந்து விட்டது. வாழ்க தியாகி குமரன்; வளர்க, வளம் பெருக தியாகத்தின் சின்னம்.

இதே நேரத்தில் மதுரைமா நகரில் தமுக்கம் மைதானத்தில பல்லாயிரக் கணக்கான மக்கள் கூடியிருந்தனர்.

தொழிலாளர்கள் அணி வகுத்து நிற்கின்றனர். நகரம் எங்கும் ஆயுதம் தாங்கிய ரிசர்வ்போலீசும், குதிரைப் படையும் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கின்றது. குறைந் தது மூன்று லட்சம் மக்கள் கூடியிருப்பர். பிரபல பாட கர் தியாகராஜ பாகவதர் மேடையில் நின்று பாடிக் கொண்டிருக்கின்றார். சிரிப்பு நடிகர் நாகர்கோயில் கிருஷ் ணனும் பாகவதருடன் ஊடே ஊடே பாடுகின்றார்.

"செந்தமிழ் நாடெனும் போதினிலே
இன்பத்தேன் வந்து பாயுது காதினிலே
எங்கள் தந்தையர் நாடென்ற பேச்சினிலே
ஓர் சக்தி பிறக்குது மூச்சினிலே"
'வேதம் பிறந்த தமிழ்நாடு உயர் ஞானம் பிறந்த
தமிழ்நாடு—பல்வகை
சாத்திரத்தின் மணம் பாரெங்கும் வீசும் தமிழ்நாடு"
"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ்
கொண்ட தமிழ் நாடு
நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரமெனும் ஓர்மணி
ஆரம் படைத்த தமிழ்நாடு"

"கம்பன் பிறந்த தமிழ்நாடு" என்று சிரிப்பு நடிகர் கிருஷ்ணன் ஒலிப் பெருக்கி முன் பேரொலியுடன் முழங் கினர். இத்தருணத்தில் மேடையை நோக்கி தேசியக் கொடியைத் தாங்கி தொண்டர் கூட்டம் வந்து கொண்டு இருக்கின்றது. மதுரை மாநகரில் உள்ள பிரபல தேச பக்தர்கள் எல்லாம் தொண்டர் கூட்டத்தில் கலந்து கொண்டனர். கூட்டத்திற்கு சிறந்த தேசபக்தரும் தமிழ் பேரறிஞருமாகிய பசும்பொன் முத்துராமலிங்கம் தலைமை தாங்கினர். பிரபல பாடகி சுப்பு இலட்சுமி "யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல் இனிதாவது யாங்க ணும் கண்டதில்லை" என்ற தேசியக் கவிஞர் சுப்பிர மணிய பாரதியாரின் பாடலை வெகு அற்புதமாக உள்ளம் உருக கோதார கௌள ராகத்தில் பாடினர். கூட்டத்தில் உள்ளோர் தமிழின் பெருமையை, தமிழின் இனிமையை,

தமிழின் மென்மையைக் கண்டு மெய் மறந்தனர். தேன் மதுரத் தமிழ் ஓசை தெவிட்டா அமுதமாக இருந்தது.

ஆயிரக் கணக்காகத் தொண்டர்கள் கூட்டத்தில் குழப்பம் ஏற்படாமல் பாதுகாக்க நிறுத்தி வைக்கப் பட்டிருக்கின்றனர். மதுரை மில், மீனாட்சி மில் முதலிய மில் தொழிலாளர்கள் அணி அணியாக கோட்டையைப் பாதுகாக்கும் வீரர்கள் போன்று சீர் உடை தாங்கி நிறுத் தப்பட்டிருக்கின்றனர். துப்பாக்கிக்காரர்களாகிய ரிசர்வ் போலீசும் நிற்கின்றனர்.

தலைவர் முத்துராமலிங்கம் ஒலிபெருக்கி முன் வந்து கரம் குவித்து வணக்கம் தெரிவித்து "நாட்டுப் பற்றும் மொழிப் பற்றும்" என்பதனை வெகு அழகாக இராம பாணம் என பல் உபமான உபமேயங்களுடன் குன்றின்மீது வைத்த விளக்குப் போன்றும் மடை திறந்த வெள்ளம் தங்கு தடையில்லாது செல்வது போல சொற் பொழிவு ஆற்றினார். "மாய இராவணன் சந்நியாசி யாக வந்து பிச்சை கேட்டு சீதா பிராட்டியாரை சிறை செய்து கொண்டு போனது போல மிலேச்சர்களும் இந்த நாட்டில் வியாபாரம் என்ற வஞ்சகத் திரையில் நம் சுதந் திர தேவியைச் சிறை செய்திருக்கின்றனர். நம் அன்னை அங்கம் எல்லாம் கட்டுண்டு மயங்கிக் கிடக்கின்றாள். நம் அன்னையை அசுர சக்திகளிடமிருந்து விடுதலை செய்யவே நாம் தமிழ் நாட்டில் பிறந்திருக்கிறோம். மனி தனை மனிதன் ஆக்குகின்றது நாட்டுப்பற்றும் நன் மொழிப் பற்றும். மேலும் நமது பாரத அன்னை, கன்னித் தமிழ் தாயாக, அங்கயற் கன்னியாக விளங்குகின்றாள். பாண்டிய நாட்டின், கயல் மீனின், அருமை பெருமைகளை கலங்கரை விளக்காக எடுத்துக் காட்டினார். "நாமிருக்கும் நாடு நமக்கே உரியது; சொந்த நாட்டில் பரற்கு அடிமை செய்து வாழோம். வந்தேமாதரம்" என்று கூறி கூட்டம் இனிது கலைந்தது.

"கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு
ஆற்றாதார் இன்னா செயல்"

1929-ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் லாகூரில் காங்கிரசு கூடியது. கூட்டத்திற்கு பண்டித ஜவஹர்லால் நேரு தலைமை வகித்தார். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலிருந்து பிரிந்து செல்ல "பூரண சுதந்திரம்" என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. காங்கிரசு அதன் அங்கத்தினர்களையும் சட்ட சபைகளிலிருந்து வெளியேறக் கட்டளை இட்டது.

சட்ட சபை தேர்தலுக்கு பிரிட்டிஷ்காரர்களுக்கு நாட்டைக் காட்டிக் கொடுக்கும் கயவர்கள் போட்டியிட்டனர். அவர்கள் சாதாரண மனிதர்கள் அல்ல. பெரும் தனவந்தர்கள், பெருநிலகிழார்கள், தொழில் அதிபர்கள், சமுதாயத்தில் உயர் நிலையில் உள்ளவர்கள். இவர்களை எதிர்த்து தேச பக்தர்கள் நின்று வெற்றி பெற்றனர். அந்தக் காலத்தில் இன்று போல் ஓட்டு உரிமை இல்லை. தமிழ் நாடு எங்கும் 'ஜஸ்டிஷ் பார்ட்டி' என்ற பெயரில் இயங்கிய நாட்டுத் துரோக கட்சி தேர்தலில் மண்ணைக் கவ்விற்று. ஒன்று இரண்டு பேர்கள் வெற்றி பெற்றிருக்கலாம். ஆனால் அவர்கள் பெரும்பாலும் மக்களின் நன் மதிப்பை பெற்றவர்களாயிருக்க வேண்டும்.

தேச பக்தர்கள் சட்டசபையிலிருந்து வெளியேறினர். காங்கிரசு வரிகொடா இயக்கத்தையும் அனுமதித்தது. மக்கள்,இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியை கொடிய சாபக் கேடு என்று கொண்டனர். அதிக பணச் செலவான இராணுவ சிவில் நிர்வாக முறையினாலும் ஸக தேர்ந்த சுரண்டுதல் முறையினாலும் பிரிட்டன் இந்தியாவை பாழடையச் செய்துவிட்டது.

பேய் நிலையில் வகுக்கப்பட்ட ஆட்சி முறை இந்நாட்டில் மக்களை அரசியல் உரிமையற்ற அடிமைகளாக்கி விட்டது. சட்டம் என்றும், நீதி என்றும் ஒழுங்கு என்றும் கூறி கைது செய்கின்றோம், கராக்கிரகத்தில் அடைக்கின்றோம், தண்டனை விதிக்கின்றோம். என்றால் அது சட்டமாகி விட முடியுமா? அது கொள்ளைக் கூட்டத்தின் சதித்திட்

டம். அதனை ஏன் ஏற்றுக் கொள்ள வேண்டும்? பிரிட்டனில் இவ்வாறு இருந்தால் இதற்கு உடந்தையாக இருப்பவன் சுட்டுக் கொல்லப்படுவான். ஆனால் இந்த நாட்டில் இத்தகைய கொடிய பாதகன் விருது பெற்று சகல வளம் பெற்று, பேரும் புகழுடனும் வாழ்கின்றான். பன்றி தானே! பணம் கிடைத்தால் போதும், எத்தகைய கொடுமைகளும் செய்யத் தயங்குவது இல்லை.

"நிலை இல்லாதது என்றும் நிலைப்பது இல்லை. உண்மை என்றும் பொய்ப்பது இல்லை. எங்கும் ஓர் எல்லையற்ற பரம் பொருள் நிலைத்திருக்கின்றது. அது அழிக்க முடியாதது, கொல்லப்படுவதும் இல்லை, கொல்வதும் இல்லை" என்ற ஆன்றோரின் அமுதமொழிக்கு இணங்க தியாகிகள் யோக மார்க்கத்தில் ஈடுபடுவது போல அடக்குமுறைக்கு அஞ்சாது அகிம்சைப் போராட்டத்தில் ஈடுபட்டனர். இதனால் கொடியவர்கள் நாட்டுப் பற்றும், நன்மொழிப் பற்றும் கொண்ட தியாகிகளுக்கு எல்லையற்ற துன்பத்தைக் கொடுத்து வறுமையினாலும் நோயினாலும் வாடி வதங்கும்படி செய்து அதனைக் கண்டு பெருமிதம் கொண்டனர். அகிம்சைப் போராட்டம் நாட்டில் பிரிட்டிஷ் ஆட்சியை நீடிக்க வைத்துவிட்டது. உலக புரட்சி இயக்கங்களையும் இந்திய சுதந்திரப் போராட்டத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால் உண்மை தெரிய வரும். இருந்தாலும் இப் பொன்னாட்டில் பிரிட்டிஷ் ஆட்சி என்றைக்காவது மடிவது திண்ணம். அத்துடன் இந்த நாட்டில் தீயசக்திகள் மூலம் சாதி, மத, இன சண்டைகளை பரப்பி அடிமை ஆக்கிவந்தது என்பதனை வாசகர்கள் மறப்பதற்கு இல்லை.

கொடிய விலங்கிற்கு ஒப்பான பிரிட்டிஷ் ஆதிக்கம் இந்த நாட்டில் உப்புக்கும் வரிவிதித்தது. இந்தியாவின் நீண்ட கடல் கரையில் இயற்கையாகத் தோன்றும் உப்பை எடுக்க உரிமை இல்லை. காங்கிரசு உப்புச் சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்தது. 1930-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 5-ஆம் தேதி தண்டிக் கடற்கரைக்கு காந்தியடிகள்

சென்றார். பல்லாயிரக் கணக்கான மக்கள் கூடி இருந்தனர். மறுநாட் காலையில் காந்தியடிகள் கடலில் குளித்துவிட்டு இறைவனைத் தொழுது அங்கு அலையால் ஒதுக்கப்பட்ட உப்பை கையினால் அள்ளிபிரிட்டிஷ்உப்புச் சட்டத்தை மீறினார். இந்த நேரத்தில் வாசகர்கள் சட்டம் என்பது என்ன என்று பொருள்படுகின்றது என்பதனை உணரவேண்டும்.

உப்புச் சத்தியாக்கிரகம் தமிழ் நாட்டில் வேதாரண்யம், திருமந்திர நகரம், குலசேகரன் பட்டினம், தோனித்துறை முதலிய இடங்களில் அதிதீவிரமாக இருந்தது. இந்தியாவின் கடற்கரை எங்கும் மக்கள் கடலில் இறங்கி பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்க்கும் பெரும் போராட்டமாக உப்பு தயாரித்தனர். ஆயிரக்கணக்காக மக்கள், கைகளில் விலங்குகளால் மாட்டப்பட்டும் கையிறுகளினால் கட்டப்பட்டும் மாடுகள்போன்று குண்டர்களால் சிறைக்கு இழுத்துச் செல்லப்பட்டனர். பல இடங்களில் குண்டர்கள் வெறிபிடித்து மக்கள் கூட்டத்தில் பாய்ந்தனர். மண்டைகள் உடைந்தன; கைகள் முறிந்தன; கால்கள் முறிந்தன. பல்லாயிரக்கணக்காக மக்கள் அடிபட்டு குண்டர்களின் பூட்ஸ் காலால் உதைக்கப்பட்டு கீழே விழுந்தனர்.

ஏன் இந்த பன்றிகள் மிருகத் தனமாக நடக்க வேண்டும்? இவர்களை எதிர்க்க மக்களிடம் ஆயுதம் இல்லை. இதனால் இக் கொடிய பாதகர்கள் எத்தகைய தீயகாரியத்தையும் செய்யத் தயங்கவில்லை.

இவர்களை அழிக்க வேண்டுமானால் இவர்களது படை வீடுகளை எல்லாம் திட்டமிட்டு நாசமாக்க வேண்டும். இரண்டாவது உலக யுத்தத்தில் மாறுதல் ஏற்பட்டுவிட்டது. அணுகுண்டு தயாரித்தல், ஏவுகணையைச் செலுத்துதல் முதலிய அதி உன்னத, இமைப் பொழுதில் ஆயிரக் கணக்கான மைல் செல்லக் கூடிய அசுர சக்தி வாய்ந்த நாசகாரிகள் தோன்றிவிட்டன. அச்சரேகை, தீர்க்கரேகையைக் கணக்கிட்டு ஆயிரக் கணக்கான மைல்களுக்கு

அப்பால் இருந்து தாக்கலாம். இதனால் பகைவர்களின் கோட்டை கொத்தளங்கள் எல்லாம் பிடிசாம்பலாய்விடும். இதனால்தான் காலனி ஆதிக்கமும், கடல் ஆதிக்கமும் உலகம் எங்கும் இரண்டாவது யுத்தத்திற்குப்பின் மறைய நேரிட்டதின் மூலகாரணம். இந்தியாவில்தான் நீண்ட காலமாக இந்தியதேசிய காங்கிரசின் எதிர்ப்பு இருந்தது என்று சொல்லலாம். மற்ற நாடுகளிலிருந்து பிரிட்டிஷார் காலி செய்தது என்? அங்கு இருந்திருந்தால் இயந்திர துப்பாக்கி களுக்கு இரையாயிருப்பர். இவற்றை எல்லாம் இங்கு குறிப்பிடுவது பட்டாளத்தை நம்பி மக்கள் வாழ்ந் தால் பாழடைய வேண்டியதுதான்; தங்களைத் தாங்களே பாதுகாத்துக் கொள்ளும் அறிவும் ஆற்றலும் மக்களிடம் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான்.

உப்புச் சட்டத்தை மீறியதால் காந்தியடிகள் கைது செய்யப்பட்டார். பண்டித ஜவகர்லால் நேருவிற்கு ஆறு மாத சிறை தண்டனை கிடைத்தது. அன்னிய துணிகளை மறியல் செய்ததால் கல்கத்தா மேயர் ஆறுமாத சிறை தண்டனை அடைந்தார். பல்லாயிரக்கணக்கான தொண் டர்கள் காவலில் வைக்கப்பட்டனர். பல நகரங்களில் பொது வேலைநிறுத்தம் நடந்தது. கடைகள் எல்லாம் அடைக்கப்பட்டு மூடிக் கிடந்தன. தமிழ் நாட்டில் உள்ள முக்கிய தேசபக்தர்களும் எழுத்தாளர்களும் சிறை வைக் கப்பட்டனர். இவை எல்லாம் 1930-ஆம் ஆண்டில் நடந்த சம்பவம். இக்காலத்தில் இந்நாட்டில் யார் யார் கொடுமைகள் செய்திருக்கின்றனர் என்று படம்பிடித்துப் பார்த்தோமானால் இந்திய விடுதலைக்குப்பின் மக்களாட்சி என்பது பெயரளவில் இருந்து வருவதைக் காணலாம். அத்துடன் இந்திய விடுதலைப் போராட்டத்தை நசுக்கி வந்த தீயசக்திகள் இந்திய விடுதலைக்குப் பின்னும் அரசி யல் பொருளாதார துறையில் அதி உன்னத நிலையில் ஓங்கி வளர்ந்து வருவதைக் காணலாம்.

1931-ஆம் ஆண்டு லண்டனில் வட்டமேசை மகாநாடு நடந்தது. காந்தியடிகள் காங்கிரசின் சார்பில் அதில்

கலந்துகொள்ள சென்றுவிட்டு ஏமாற்றத்துடன் இந்தியா திரும்பினர். அவர் பம்பாய் துறைமுகம் வந்தடைந்த சில நாட்களில் கைது செய்யப்பட்டு ஏர்வாடா ஜெயிலுக்குக் கொண்டுபோகப் பட்டார். அங்கு வல்லபாய் பட்டேலும் மகாதேவ் தேசாயும் காவலில் வைக்கப்பட்டிருந்தனர். அடக்குமுறைகள் எங்கும் தாண்டவம் ஆடின. பிரிட்டிஷாரின் திட்டங்கள் எல்லாம் குதிரைக்கு முன் வண்டியை நிறுத்தும் தலைகீழ் வஞ்சக சதித்திட்டம் என்று நேதாஜி சுபாஸ் சந்திரபோஸ் கூறினர். பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவிற்கு சுதந்திரம் கொடுக்க உள் அன்புடன் நடந்து கொள்ளவில்லை. நாட்டின் சுதந்திரத்திற்கு விரோதமாக தீயசக்திகளுடன் வீணர்களுடன் உறவாடி வந்தனர்.

1939-ஆம் ஆண்டு இரண்டாவது உலகயுத்தம் ஆரம்பித்தது, காங்கிரசு மகாசபை "வெள்ளையனே வெளியேறு யுத்தத்திற்கும்இந்தியாவிற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை.இந்தியர்கள் யுத்தத்தில் பங்குகொள்ளக் கூடாது" என்று அறிவித்தது. ஆனல் இதர கட்சிகள் பிரிட்டிஷாருடன் ஒத்து உழைக்க முன் வந்தன. இதனை நாட்டுத் துரோகம் என்று அக்கட்சிகளும் அவற்றின் தலைவர்களும் உணரவில்லை.

1942-ஆம் ஆண்டு ஜப்பான் தென் கிழக்கு ஆசியா முழுவதும் கைப்பற்றியது. நேதாஜி சுபாஸ் சந்திரபோஸ் சிறையிலிருந்து தப்பி கீழ்நாடுகளுக்குச் சென்றுவிட்டார். சிங்கப்பூரை தலைமை காரியாலயமாகக் கொண்டு இந்திய தேசிய இராணுவத்தை ஏற்படுத்தினர். இந்திய மக்களை காப்பாற்ற ஏற்பட்டது இந்திய தேசிய இராணுவமாகும். இந்திய சரித்திரத்திலேயே அதிலும் உலக சரித்திரத்திலேயே முக்கிய இடம் பெற வேண்டிய சம்பவமாகும். இதனை அனுகூலமாகக் கொண்டு இந்திய பட்டாளங்கள் எல்லாம் இந்தியாவிலுள்ள கட்சிகள் எல்லாம் இந்தியாவில் உள்ள அரசியல் நிர்வாகம் எல்லாம் அன்னிய ஆட்சிக்கு முற்றுப் புள்ளி வைத்திருக்கலாம் ஆனல் பிரிட்டி

ஷாருக்குக் கைக்கூலியாய் வாழப் பிரியப்பட்டனரே அல்லாது சுதந்திரத்தை நிலைநாட்ட முன்வரவில்லை. எங்கு தீய சக்திகள் தோன்றுகின்றனவோ அதனை எதிர்க்க நல்ல சக்திகளும் தோன்றிவிடுகின்றன. நேதாஜியின் சேனையில் தமிழர்கள் பெருவாரியாகச் சேர்ந்து அதி அற்புதமான காரியங்களைச் செய்து வந்தனர். தில்லியில் உள்ள ஆட்சியைக் கைப்பற்ற திட்டமிட்டனர்.

இதற்குள் யுத்தத்தில் பெரும் மாறுதல் ஏற்பட்டுவிட்டது. ஜப்பானுக்குச் சொந்தமான ஹிரோஷிமா பகுதியில் அமெரிக்கா அணுகுண்டு வீசி ஜப்பானை தோற்கடித்தது. சோவியத் ருஷ்யா ஜெர்மனியைத் தாக்கி பெரும் சேதத்தை உண்டுபண்ணிவிட்டது. நேதாஜீ சுபாஸ் சந்திரபோஸ் சென்ற விமானம் சுட்டுவீழ்த்தப்பட்டு அத்தியாக தீபம் கொல்லப்பட்டார்.

> "குன்று அன்னார் குன்ற மதிப்பில் குடியொடு
> நின்றன்னார் மாழ்வர் நிலத்து"

இராமாயணத்தில் பரதனைப் பற்றிக் கூற வந்த கம்பநாடுடைய வள்ளல் ஆயிரம் இராமரும் இணையாகார் என்று கூறினர். அதுபோன்று இந்திய விடுதலைப் போராட்டத்தில் ஆயிரம் காந்தி அடிகளும் இணையாகார். என்று தியாகத்தின் சின்னம் சுபாஸ் சந்திரபோஸைப் போற்றிக் கொண்டாடாமல் இருப்பதற்கு இல்லை. அகிம்சை புரட்சி வேறு, ஆயுதப் புரட்சி வேறு, என்று நுண்ணறிவாளர் கொள்ளமாட்டார்கள். ஆயுதம் தாங்கியவர்களை எதிர்க்க ஆயுதம் தேவைப்படுகின்றது. இன்று பாகிஸ்தானும் சீனவும் இந்திய மண்ணிற்கு ஆசை கொண்டு பயங்கர ஆயுதங்களைத் தாங்கி போரிடுகின்றன இதே சமயத்தில் இவற்றை எதிர்க்க அகிம்சை வழி சிறந்தது என்று யாராவது கூறுவானகில் அவனைப் பைத்தியக்காரன் என்றுதான் கூறவேண்டும். இமைப் பொழுதில் இடி முழக்கம் செய்யும் நவீன யுத்த தளவாடங்கள் இல்லை என்றால் இந்திய நாட்டு மக்கள் நசுக்கப்பட்டு கொல்லப்

படுவர். மக்களுக்கு ஆயுதம் தாங்கும் உரிமை இல்லாத தால் தங்களைப் பாதுகாத்துக்கொள்ள முடியாமல் கடந்த 150 ஆண்டுகளாக எல்லையற்ற இன்னல் அடைந்ததை இந்திய சரித்திரம் பக்கம் பக்கமாக கண்ணீர் விட்டு அழும், நீதிக்கும் நேர்மைக்கும் தருமத்திற்கும் கட்டுப்பட்டு நடக்கவேண்டுமே அல்லாது அகிம்சை என்றோ புரட்சி என்றோ திரித்துக் கூறுவதற்கு இல்லை. மகாபாரத யுத் தத்தில் கௌரவ சேனைகளும் பாண்டவ சேனைகளும் ஒன்றை ஒன்று எதிர்த்து சண்டையிடத் தயாராக நிற்கின் றன. கண்ணன் அருச்சுனனுக்குச் சாரதியாக தேரோட்டுகின்றான். யுத்தகளத்தில் தேர் தட்டில் நின்று கொண்டு போரிடத் தயாராக இருக்கும் சேனைகளையும் சேனைத் தலைவர்களையும் அருச்சுனன் காண்கின்றான்; கண் கலங்குகின்றான், காண்டீபம் கை நழுவுகின்றது, நிற்கவும் முடியவில்லை. கேவலம் அரச போகத்திற்காக சண்டை யில் ஈடுபட மனம் தளர்ச்சி அடைகின்றது. சோர்ந்து விடுகின்றான். துக்க சாகரத்தில் மூழ்கிய காண்டீபனுக்கு பரந்தாமன் கண்ணன் உபதேசம் செய்ததாக பகவத் கீதை என்ற நூல் வடமொழியில் வியாசதேவரால் எழு தப்பட்டதாக கூறப்படுகின்றது. பகவத் கீதையில் ஞான விஞ்ஞான யோகத்தைப் பற்றிய உன்னத கருத் துக்கள் இன்றைய விஞ்ஞான நிலைக்கும் அதி உன்னத நிலையில் சித்தரிக்கப்படுகின்றன. இவற்றின் உண்மையை அறிந்தவர்கள் அகிம்சைப் போராட்டம், புரட்சி இயக்கம் இவற்றின் மீது மாறுபட்ட கருத்துக்களை தெரிவிக்கமாட் டார்கள்.

> "சிற்றுளியும் மலை பெயர்க்கும் தகரா
> கொல் உலைக் கூடத்தினால்"

என்ற முதுமொழிக்கு இணங்க எந்தெந்த மார்க்கங்கள் சிறந்தது என்று காலத்தையும் இடத்தையும் கவனித்து அளவையாளர் முடிவு செய்வர். இவற்றை இங்கு குறிப் பிடுவது புரட்சிக்காரர் என்று நேதாஜி சுபாஸ் சந்திர போஸை மறப்பதற்கு இல்லை என்று சுட்டிக்காட்டுவதற்

குத்தான். அப்பெருந்தகையின் நாட்டுப் பற்றும், அரிய தியாகமும் போற்றிக் கொண்டாடப்பட வேண்டியவை ஆகும். காங்கிரசு மகாசபை தலைவர் பதவிக்கு பண்டித ஜவகர்லால் நேருவும் சுபாஸ்சந்திர போசும் போட்டி இட்டனர். சுபாஸ்பாபுவிற்கு கடுமையான விஷ காய்ச்சல். காந்தி அடிகள் பண்டித நேருவை ஆதரித்தார். விஷ காய்ச்சலைப் பொருட்படுத்தாமல் சுபாஸ் பாபு காங்கிரசு மகாசபை கூட்டத்தில் கலந்துகொண்டார், வெற்றி பெற்றார். மகான் காந்தி அடிகளை எவ்வாறு மறக்க முடியாதோ, அதேபோன்று இந்திய தேசிய இராணுவத்தின் தளபதி சுபாஸ்சந்திர போஸை பாரதம் மறப்பதற்கு இல்லை.

'தோற்பன் எனினும் புகழ் நிற்கும்
தருமமும் தொடரும்' என்பது அவர் விட்டுச் சென்றது.

இரண்டாவது உலக யுத்தத்தினல் ஐரோப்பாவின் நிலை குன்றிவிட்டது. ஜெர்மனியும் அதனைச் சேர்ந்த நாடுகளும் நாசம் அடைந்தன. பிரிட்டன் பாழடைந்த அரண்மனை போன்று காட்சி அளித்தது. சோவியத் நாடுகள் பிரிட்டனைவிட பல மடங்கு படை பலம் பெற்றதாய்விட்டன. சோவியத் நாடுகளின் விமான படையையும் விண்வெளிப் பயணத்தையும் அசுர யுத்த தளவாடங்களையும் எதிர்க்க பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் முடியாதநிலை ஏற்பட்டுவிட்டது. ஆகவே இரண்டாவது உலக யுத்தத்தின் வெற்றி பிரிட்டனுக்கு கிடைத்தது என்று பெயரளவில்தான் கூறவேண்டும். உண்மையில் அதன் காலனி ஆதிக்கமும் கடல் ஆதிக்கமும் காலை மதியம் போன்று மறைந்துகொண்டிருந்தன; அதன் ஏகாதிபத்திய சூரியன் கரண்டு அணைந்துவிட்டான். இன்றைய உலக வல்லரசர்களில் அமெரிக்க குடிஅரசு நாடுகளும் சோவியத் நாடுகளும் அதி உன்னத நிலையில் இருந்துவருகின்றன. பிரிட்டன் ஆசிய ஆப்பிரிக்க நாடுகளுக்குச் செய்த கொடுமைகள் நெஞ்சம் மறப்பதற்கு இல்லை. அவை பிரிட்டிஷ்ஆதிகத்திலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள துடிதுடித்தன.

சோவியத் நாடுகள் பொது உடைமை நாடுகள். பிரிட்டன் அமெரிக்கா முதலிய நாடுகள் முதலாளித்துவ நாடுகள் ஆகும். பொது உடைமை நாடுகளை முறியடிக்கும் ஆற்றல் முதலாளித்துவ நாடுகளுக்கு இல்லை. அத்துடன் ஆசியா எங்கும் பொது உடைமைக் கிளர்ச்சி வலுப் பெற்றுவிட்டது. முதலாளித்துவ சுரண்டல் வீழ்ச்சி அடையத் தொடங்கிவிட்டது. இதனால்தான் பிரிட்டானியர்கள் ஆசியாவிலிருந்து வெளியேறவேண்டிய அவசியம் ஏற்பட்டது. அவர்களது உயிருக்கும் உடமைக்கும எந்த நேரத்திலும் ஆபத்து வரும் என்று அஞ்சினர். ஆனால் பிரிட்டானியர்கள் ஒழுங்காக நேர்மையான முறையில் ஆசியாவை விட்டு வெளியேறவில்லை. உள்நாட்டுக் கலவரத்தையும் மதவெறியையும் தூண்டிவிட்டனர். பிரிட்டானியர் இந்தியாவில் மட்டும் இவ்வாறு செய்யவில்லை. அவர்கள் காலடி வைத்த இலங்கை, பர்மா முதலிய இடங்களிலெல்லாம் கலவரத்தை உண்டாக்கி வெளியேறினர். ஆனால் உண்மை சரித்திரம் மட்டும் இவர்களைப் போல் கொடிய வஞ்சகர்கள், கொலை கொள்ளை புரியும் சண்டாளர்கள், வேறுயாரும் இல்லை என்று கூறுமல் இருப்பதற்கு இல்லை.

பிரிட்டானியர் நல்ல எண்ணத்துடன் இந்தியா முதலிய ஆசிய நாடுகளைவிட்டுப் பிரிந்தனர் என்று சொல்லுவதற்கில்லை. இந்நாடுகளில் இனி ஆதிக்க உரிவமயைக் கொண்டாடினால் சுட்டுத் தள்ளப்படுபவர் என்ற பயம் அவர்களின் நெஞ்சில் கொடிய நெருப்பாகச் சுட ஆரம்பித்துவிட்டது. அதுமட்டுமல்ல, இங்கிலாந்து தாக்கப்பட்டால் பிரிட்டிஷ்காரர்கள் எல்லோரும் கொல்லப்படுவர். அவர்களது பிணத்தை கழுகுகளும் கடல் காக்கைகளும் தின்று களிபாடும் என்ற பயம் அவர்களிடம் இல்லை என்று நினைக்காமல் இருப்பதற்கு இல்லை. ஹிரோஷிமாவில் போடப்பட்ட ஒரு அணுகுண்டு போதும் பிரிட்டிஷ் தீவுகள் கடலுக்கு அடியில் செல்வதற்கு.

இந்தியாவின் சுதந்திரத்திற்காக காங்கிரசு போராடினது. ஆனல் மனித மிருகங்களாகிய பிரிட்டிஷாரிட

மிருந்து நியாயமான முறையில் சுதந்திரத்தைப் பெறமுடியாமல் போய்விட்டது. இரண்டாவது உலக யுத்தத்தின் முடிவே, மகான் ஏசுநாதர் சிலுவையில் அறையப்பட்ட பாதகத்தால் விளைந்த சாபமே, ஆங்கிலேயர்களையும் ஐரோப்பியர்களையும் படுகுழியில் தள்ளிவிட்டது என்ற உண்மை குன்றின்மீது வைத்த விளக்கு. இந்த உண்மையை பம்பாயில் நடந்த கிருஸ்துவ பாதிரிகளின் சபையில் ரோமிலுள்ள கத்தோலிக கிருஸ்துவ மடங்களின் தலைமைக் குரு தவத்திரு போப் பால் கூறுவதைப் பாருங்கள்:

“அசத்திலிருந்து சத்திற்கு என்னை அழைத்துச் செல்லட்டும். இருளிலிருந்து வெளிச்சத்திற்கு என்னை இட்டுச்செல்லட்டும். மரணத்திலிருந்து என்னை அமரத்துவத்திற்கு எடுத்துச் செல்லட்டும். பாரதமே எனது நினைவின் அதி உன்னத நாடு அல்லாது வேறு ஒன்றும் இல்லை. ஆண்டவன்பாரத நாட்டை அன்பும் அமைதியும்பொங்கச் செய்ய கருணை பொழியட்டும்”

# 5

# காந்தி துறை

“பஞ்சமும் நோயும் உன்தன் மெய்யடியார்க்கோ
பாரினில் மேன்மைகள் வேறு இனி யார்க்கோ”

1945-ஆம் ஆண்டு மே மாதத்தில் ஜெர்மனி சரண் அடைந்தது. அதே வருடம் ஆகஸ்டு மாதம் 14-ஆம் தேதி ஜப்பானும் சரண் அடைந்துவிட்டது. ஆனால் பிரிட்டனேஒருகடன்கார நாடாக ஆகிவிட்டது. அமெரிக்க நாடுகளும் சோவியத் நாடுகளும் பிரிட்டனின் ஆதிக்கத்தைக் கைப்பற்றிக் கொண்டன.

‘பெற்றதாயும் பிறந்த பொன்னாடும் நற்றவ வானினும் நனி சிறந்தனவே’ என்று கூறுவர் நாட்டுப் பற்றும் நன்

மொழிப் பற்றும் கொண்டவர்கள். ஆனால் இந்த நாட்டில் நல்ல உணவு, நல்ல உடை, நல்ல சம்பளம் என்று பட்டாளத்திற்கு ஆட்கள் சேர்த்தனர். இந்திய சிவில் சர்வீஸ், இந்திய போலீஸ் சர்வீஸ், என: மேலை நாடு சென்றுபடித்துப் பட்டம் பெற்றவர்கள் பூர்வஜென்ம புண்ணியத்தால் ஏற்பட்ட பலன் என ஆளப் பிறந்தவர்கள் என்று மகிழ்ந்து குலாவி இருந்தனர். நாட்டில் மக்களிடமிருந்து பெறப்பட்ட வரியில், கட்டணங்களில், பெரும் பகுதி இவர்களுக்குச் செலவிடப்பட்டன. இதே தொழிலில் அமர்த்தப்படும் வெள்ளையர்களுக்கு பன்மடங்கு ஊதியமும் உரிமையும் கொடுக்கப்பட்டு வந்தன. இவற்றை எல்லாம் மறந்து இவர்கள் போதை உள்ளத்தில் இப் புண்ணிய பூமியை அன்னியனுக்கு அடிமையாக்கிக்கொண்டிருந்தனர்.

இரண்டாவது உலக யுத்தம் முடிந்தது. இந்திய கடல் படை, தரைப் படை, விமானப் படையினால் வெற்றி அடைந்த வெள்ளை அரசாங்கம் இவர்களுக்கே துரோகம் செய்ய தயங்கவில்லை.

1946–ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 21–ந்தேதி பம்பாயிலிருந்த இந்திய கடற்படை வீரர்கள் வெள்ளை சிப்பாய்களுக்குக் கொடுக்கப்படும் ஊதியமும் உரிமையும் இந்திய சிப்பாய்களுக்கும் கொடுக்க வேண்டுமென்று உரிமைப் போர் தொடங்கினர்.

நேதாஜி சுபாஸ் சந்திரபோஸ் இந்திய தேசிய ராணுவத்தை அமைத்தார். இந்திய தரைப் படை, கடல்படை விமானப் படை வீரர்கள் தளபதி சுபாஸ் பாவிற்கு நன்றி செலுத்தி தாய் நாட்டின் விடுதலைக்காக வெள்ளையனே வெளியேறு என அகில இந்திய காங்கிரசு முழக்கம் செய்யும் பொழுது தாங்களும் உள்ளன்புடன் கலந்து போராடியிருக்க வேண்டும். ஆனால் அவர்களின் நிலை என்ன? வெள்ளை சிப்பாய்களுக்குக கொடுக்கப்படும் பாதுகாப்பும் நவீன ஆயுதங்களும் அவர்களுக்கு இல்லை. ஆட்டுமந்தை போன்று இந்திய சிப்பாய்களையும் இந்திய போலீஸ் நிர்வாகத்தையும் இந்திய சிவில் சர்வீஸையும் முன்னுக்கு

நிறுத்தி பிழைத்து வந்தனர் காட்டு மிருகங்களாகிய வெள்ளை அரசாங்கம். இந்திய இராணுவம் தங்களுக்கு அடிமைக் கூலி என மதித்து வந்தது நன்றிகெட்ட பிரிட்டிஷ் நிர்வாகம்.

இத்தகைய இழிநிலையைப் போக்க சிப்பாய் கலகத்திற்குப் பின் முதன்முதலாகமுன்வந்ததுபம்பாயில்உள்ள இந்திய கடல்படை வீரர்கள் ஆவர். இவர்கள் தங்களின் உரிமைக்காகப் போராட ஆரம்பித்தனர். அத்துடன் இந்திய தேசிய இராணுவத்தினரை ராஜத் துரோகிகள் என குற்றம் சாட்டப்பட்டு தூக்கில் இட பிரிட்டிஷ் இராணுவம் திட்டம் இட்டதை இத்தியப் படை வீரர்கள் எதிர்த்தனர். இது நியாயமானது, நேர்மையானது, பாராட்டக் கூடியது. ஆனல் மனித குல நாசத்திற்கே உருவாகிய நன்றிகெட்ட பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் இந்திய மண்ணில் பயங்கரப் பேயாக தலைவிரித்தாடியது. இரண்டாவது உலக யுத்தத்தில் பிரிட்டனுக்காகப் போரிட்ட இந்திய இராணுவ வீரர்களின் இரத்தத்தைக் குடிக்க பிரிட்டிஷ் பேய் கும்மாளம் அடித்தது.

இதனல் பம்பாய் கடற் படை வீரர்கள்கைதுசெய்யப்பட்டனர். இந்திய கடற்படை வீரர்களின் முகாமைச் சுற்றி வெள்ளை இராணுவம் வளைத்து நின்றது. ஆயுதங்களும் வெடி மருந்துகளும் அகற்றப்பட்டன. ஆனல் ஒரு முகாமில் இந்திய வீரர்கள் ஆயுதங்களை தரமறுத்துவிட்டனர்; கப்பலில் இருந்த கடல் படை வீரர்கள் இறங்க மறுத்தனர். இவர்களுக்கு உணவு கொடுப்பது நிறுத்தப்பட்டது. குடிக்கத் தண்ணீர் தர மறுக்கப்பட்டது. ஆனல் சில வீரர்கள் தங்கள் சகோதரர்கள் படும் எல்லையற்ற துன்பத்தைக் காண மனம் நொந்து இனி வாழ்ந்தாலும் சரி இறந்தாலும் சரி என உணவும் தண்ணீரும் அவர்களுக்குக் கொடுக்க முன் வந்தனர். காவலுக்கு நின்ற கொள்ளைக்காரச் சிப்பாய்கள் அவர்களைச் சுட்டுக் கொன்றுவிட்டார்கள்.

இந்த வெறிபிடித்த செயலைக் கண்டு கப்பலில் இருந்த வீரர்களும் முகாமில் இருந்த வீரர்களும் துப்

பாக்கிகளை எடுத்தனர். பிரிட்டிஷ் இராணுவம் சுட்டது இந்திய இராணுவம் எதிர்த்துச் சுட்டது. இந்திய கடற் படையை அழித்துவிட பிரிட்டிஷ் இராணுவம் துணிந்து விட்டது. இயந்திரத் துப்பாக்கிகள் முழங்கின. பம்பாய் கடல் ரத்தக் கடலாக மாறியது. கடற்படை வீரர்களின் முகாம் பிணக் காடாகத் தோன்றியது.

இந்தியக் கடற்படை வீரர்களுக்கு ஏற்பட்ட தாங் கொண்ணுத் துயரம் பம்பாய் நகரமெங்கும் ஊழிக் காற்று என பரவி கொடும் புயலாக மாறியது. பம்பாய் நகரத்தி லும் சுற்றிலும் உள்ள உழைக்கும் கரங்கள் வீறுகொண்டு எழுந்தன. அந்தக் காலத்தில் சிப்பாய்க் கலகத்தை அடக்கி ஒடுக்கி விட்டதாக வெள்ளையன் பெருமைப்படு வான். ஆனல் இன்று பம்பாய் கடற்படை வீரர்கள் கொட்டிய போர் முரசு இமயம் முதல் குமரிவரை கொதித்து எழுந்துவிடும்: எரிமலை போன்று பயங்கர ஆயு தப் போர் நடகக ஆரம்பித்துவிடும் இந்தியாவிலுள்ள ஆங்கிலேயர்கள் சுட்டுக் கொல்லப்படுவர், அதுமட்டுமல்ல பதிலுக்குப் பதில் வெள்ளையர் உள்ள இடமெல்லாம் பிணக்காடாக மாறிவிடும். ஆனல் நல்ல காலமாக இது பம்பாய் நகரத்துடன் நின்று கொண்டது.

பம்பாய் நகரத்தில் கடைகளும் அலுவலகங்களும் தொழில்சாலைகளும் மூடிக்கிடந்தன. பம்பாய் நகரமே பொலி விழந்து விட்டது. சூரியன் மறையும் வேளை. வெள் ளைக்காரப் பட்டாளங்கள் பம்பாயில் வந்து குவிந்தன. மக்களை கண்ட இடமெல்லாம் இயந்திரத் துப்பாக்கியால் சுட்டன. பம்பாய் நகரத்தில் இரத்த ஆறு பெருக் கெடுத்து ஓடியது. எங்கும் பிணக்குவியல்கள்: கடலில் நூற்றுக்கணக்கான இராணுவ வீரர்களின் பிணங்கள் மிதக்கின்றன. தரையில்உயிர் இழந்தோர் ஆயிரம்ஆயிரம். கரம் இழந்தோர் கை இழந்தோர் பல்லாயிரம். அவ்வாறு இருந்தும் இக்கொடிய மிருகங்களை எதிர்த்துப் போராட பம்பாய் நகர மக்கள் பின்வாங்கவில்லை. மறைந்து நின்று தாக்க ஆரம்பித்தனர். தெருக்களில் பிரிட்டிஷ் இராணு வம் செல்ல முடியாதபடி மரங்கள் வீழ்த்தப்பட்டன;

பெருங் கல்கள் உருட்டப்பட்டன, பாலங்கள் நொறுக்கப் பட்டன. வெள்ளை நாய்கள் சுட்டுக் கொண்டே வருவர். ஆனால் மக்கள் அவர்களது கண்களுக்குத் தென்படுவது இல்லை. பதுங்கி இருந்து பலத்த சேதத்தை உண்டு பண்ணுவர்.

இந்நிலையில் காங்கிரசுத் தலைவர்களை கடல்படை வீரர்களின் வேலை நிறுத்தக் குழு .தலைவர் நேரில்கண்டு ஆலோசனை செய்தார். காங்கிரசு தலைவர்கள் வாக்குறுதி அளித்தனர். இதனால் போராட்டம் நின்றது. இந்திய வீரர்கள் ஆயுதங்களைக் கீழே போட்டனர். பம்பாய் நகரம் மீண்டும் அமைதி அடைந்தது. இந்திய படை வீரர்கள் பிரிட்டிஷ் ராணுவத்திற்குப் பணியவில்லை. தாய் நாட்டின் விடுதலை வீரர்களின் மூதுரைக்குப் பணிந்தனர்.

இந்திய கடற்படை வீரர்களின் சுதந்திரப் போராட்டம் பாரத மண்ணில் வெள்ளையன் கொடி இறக்கப்பட வித்து இட்டுவிட்டது. நேதாஜி சுபாஸ் சந்திரபோஸ் கனவு பலித்துவிட்டது என்றே சொல்ல வேண்டும். வெள்ளை சிப்பாய்களுக்குக் கிடைக்கும் பயங்கர ஆயுதங்கள் இந்திய சிப்பாய்களுக்கும் கிடைக்காமல் போய் விடாது. அத்துடன் வெள்ளைக்கார ஆட்சியை பாரத மண்ணில் நிலைநாட்டி வந்த இந்திய ஐ. சி. எஸ். அதிகார வர்க்கம் இனி பிரிட்டிஷ்காரர்களின் கைக்கூலிகளாக இருந்து தாய் நாட்டையும் தாய் நாட்டின் சுதந்திரத்தை யும் எதிர்க்காது என்ற சூழ்நிலையும் உதயமாய்விட்டது. அதுமட்டுமல்ல இதுவரை சுதந்திரத்திற்காகப் போராடிய அகிம்சைப் போராட்டம் இனி ஆயுதப் போராட்டமாக மாறி, காலமானது கரங்குபோல் சுழன்று மேலது கீழாய் கீழது மேலாய் மாற்றிவிடும். என்பது சுலங்கரை விளக்கம்.

1946-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 26ஆம் தேதிபிரிட்டனில் தேர்தல் நடந்தது அதில் கன்சர் வேடிவ் கட்சியைத் தொழில் கட்சி முற்றிலும் தோற்கடித்து விட்டது.

சர்ச்சில் என்பவருக்குப் பதில் ஆட்லி என்பவர் முதல் மந்திரி ஆனர் புதுக் கட்சியை அமைத்த அரசாங்கம் இந்தியாவுக்கு சுய ஆட்சி கொடுக்க வெள்ளை அறிக்கை வெளியிட்டது. இதற்காக இந்தியாவில் வைஸ்ராயாக இருந்த வேவல் இங்கிலாந்திற்கு அழைக்கப்பட்டார். அவர் தில்லிக்குத் திரும்பியதும் மாகாணங்களில் இந்தியருடைய ஆட்சியைப் புதுப்பிக்கப் போவதாகவும் கூட்டாட்சி அரசாங்கம் ஏற்படுத்த ஒரு சபையைக் கூட்டப் போவதாகவும் வெளியிட்டார் காங்கிரஸ், முஸ்லிம்லீக் பிரதிநிதிகள் அடங்கிய நிர்வாக சபை ஒன்று அமைக்கப் போவதாகவும் கூறினர். அதுபிரிட்டிஷ் மேற்பார்வையில் ஒரு வகை மந்திரி சபையாக இருக்கும். இதற்கு இணங்காவிட்டால் "இந்தியாவைத் துண்டாடவும், சிந்து பலுசிஸ்தானம் பஞ்சாப் எல்லைப்புற மாகாணம், வங்காளம் அஸ்ஸாம் ஆகிய ஆறு மகாணங்களை உடைய பாக்கிஸ்தான் பிரிவினை ஏற்படுத்தி மற்றமாகாணங்களிடமிருந்து பிரிந்து ஒரு தனி ஆட்சியின் கீழ் கொண்டு வரப் படும்" என்றும் கூறினர்.

பாரதத்தினல் முன்னுக்கு வந்த பிரிட்டானியர், பாரதத்திற்கு கொடிய துரோகங்கள் செய்த பிரிட்டானியர், பாரதத்தை துண்டு போடவும், பாரதத்தில் உள் நாட்டுக் கலவரம் ஏற்படவும் 'ஜின்னு' என்பரை ஒரு கையாளக் கொண்டு நாட்டில் விஷ வித்துக்களை விதைக்க ஆரம்பித்து விட்டனர். ஜின்னு, நபிகள் நாயகத்தின் உண்மை போதனைக்கு மாருக மதத்தின் பெயரால் வெறியர்களைத் திரட்ட பிரிட்டனுக்கு உடந்தையாக இருந்தார். புனிதமான முகமதிய மதத்தையும் குரானையும் இரத்த வெள்ளத்தில் மிதக்கச் செய்தார். இதனைப் போல கொடிய பாதகம் வேறு ஒன்றும் இல்லை.

*1920*–ஆம் ஆண்டிலிருந்து *1942* ஆம் ஆண்டு வரை காந்தி அடிகள் நடத்திய அகிம்சைப் போராட்டம் வெற்றி அடையவில்லை. "வேங்கை வரிப் புலி நோய் தீர்த்த விடதாரி, ஆங்கு அதனுக்கு ஆகாரம் ஆனற்போல், பாங்கு

அறிய புல்லறி வாளருக்குச் செய்த உபகாரம் கல்லின் மேலிட்ட கலம்" போல இந்தியாவைத் துண்டுபோட பிரிட்டானியார்கள் முனைந்து விட்டனர். முகமதிய வெறியர்களையும், தாழ்த்தப்பட்டவர்கள் என்று கூறப் படுபவர்களையும் கையாளகக்கொண்டு நாட்டில் பாலில் நஞ்சை கலந்து வந்தனர்.

சுதந்திர இந்தியாவில் இந்துக்களே பெரும்பாலான அரசாங்க உத்தியோகங்களையும் மற்ற பொருளாதார பலன்களையும் பறித்துக் கொள்வர். சிறுபான்மையின ராகிய முஸ்லிம்களுக்கு அரசியல் பிரதிநிதித்துவமும் அதிக உத்தியோகங்களையும் கொடுத்துவந்த பிரிட்டிஷ் காரர் இந்தியாவைவிட்டு வெளியேற முஸ்லீம்கள் விரும்ப வில்லை என்று கிளர்ச்சியை உண்டுபண்ணினர். பாகிஸ் தானில் தங்களுக்கு எல்லா அரசியல் அதிகாரமும் வேலை களும் கிடைக்குமென்றும் தொழில் வியாபாரம் அனைத் தும் தங்கள் கட்டுப்பாட்டிற்கு அடங்கி நடக்குமென்றும் பொய்ப் பிரசாரங்களைச் செய்துவந்தனர். மதத்தை அடிப் படையாகக் கொண்ட பாகிஸ்தானில் அவர்களுக்கு சமு தாயத்தில் ஒரு நிலையான அரசியல் பொருளாதார துறை யில் ஏகபோக உரிமைகளும் கிடைக்குமென்று பாகிஸ் தான் தேச வெறியை உண்டாக்கினர். பாதகர்களும் வஞ்சகர்களும் புனித குரானின் பொன்மொழிகளை மறந்து கொள்ளைக்கும் கொலைக்கும் தயாராய் விட்டனர்.

"பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின்"

எதற்காக பாகிஸ்தான் பிரிய வேண்டும்? இது நியா யம்தானா? இதனை மதப்பற்று உள்ள ஒவ்வொரு முகமதிய னும் சிந்திக்க வேண்டும். பாகிஸ்தான் உருவானால் இந் தியாவில் உள்ள மற்ற முகமதியர்களின் நிலை என்ன? மதத்திற்கும் பாகிஸ்தானுக்கும் என்ன சம்பந்தம்? முக மதியர்களின் அரசியல் பொருளாதார முன்னேற்றத்திற்கு பாகிஸ்தான் ஏற்பட்டுவிட்டால் நடந்துவிடுமா? இவற்றை எல்லாம் சிந்தித்துப் பார்த்தால் உள்நாட்டில் கலவரத்தை

தூண்டவும் நாட்டைத் துண்டாடவும் செய்யும் சதி என்று தான் கூறவேண்டும். இதற்கு உடந்தையாக இருந்தவர்கள் தூக்குத் தண்டனைக்கு உரியவர் ஆவர். மதம் புனிதமானது. இதனை அற்பத்தனமாக உபயோகப்படுத்துவது வீணர்களின், வஞ்சகர்களின், காலிகளின் செயலே என்று கூறவேண்டும். நபிகள் நாயகத்தின் உண்மை பக்தன் எங்கும் அப்பெருந்தகையின் நிழலையே காண்கின்றான்! தன்னையே மறந்து அத்தியாக தீபத்திற்கு அடிமை ஆகின்றான்: அவன், கொள்ளைக்கும் கொலைக்கும் தயாராக எவ்வாறு இருக்கமுடியும்? நபிகள் நாயகம் தோன்றுவதற்கு முன் அரேபியா இருந்த நிலையைத்தான் பாகிஸ்தான் உண்டுபண்ண முடியும்.

1946ஆம் ஆண்டு மார்ச் மாதம் 23ஆம் தேதி இந்தியா விடுதலை அடையும் முறைகளைப் பற்றிப் பேசுவதற்காக பிரிட்டிஷ் அமைச்சர் குழு ஒன்று வந்தது. அந்நிய ஆட்சிக்குப் பதிலாக இந்தியர் சுதந்திர ஆட்சியை எப்படி நிறுவுவது என்பது பற்றி இந்திய தலைவர்களை கலந்து ஆலோசித்தனர். முஸ்லிம் லீக் தலைவர்களுக்கும் காங்கிரசு கட்சி தலைவர்களுக்கும் இடையே ஒருமைப்பாடான கருத்துக்கள் இல்லை என எரிகின்ற வீட்டில் பிடுங்கியது லாபம் என்ற நிலைக்கு வந்து விட்டனர்.

1946ஆம் ஆண்டு மே மாதம் 16ந் தேதி ஒரு திட்டத்தை வகுத்து அதன்படி தூதுகோட்டி பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குப் பின்வருமாறு அறிவித்தது.

(1) பிரிட்டிஷ் இந்தியாவும் சுதேச சமஸ்தானங்களும் சேர்ந்து ஒரே இந்தியாவாக இருக்கும். இதற்கு ஒரு கூட்டாட்சி அரசாங்கம் அமையும். பாதுகாப்பு, அந்நிய நாட்டு விவகாரங்கள், போக்குவரத்து அதனுடைய பொறுப்பில் இருக்கும்.

(2) பெரும்பான்மை இந்துக்களும் முஸ்லிம்களும் சேர்ந்து ஓட்டுக் கொடுத்தாலன்றி சாதி மத சம்பந்தமான

சட்டங்களை கூட்டாட்சி பார்லிமெண்ட் நிறைவேற்றக் கூடாது.

(3) மாகாண அரசாங்கங்களுக்கு அதிக அதிகாரங்கள் இருக்கும். கூட்டாட்சி மிகத் தேவையான தேசிய வேலைகளில் மட்டும் ஈடுபடவேண்டும். மற்ற அதிகாரங்களை மாகாண அரசாங்கங்களுக்குக் கொடுத்து விடவேண்டும். முஸ்லிம்கள் பெரும்பான்மையோராக இருக்கும் மாகாண அரசாங்கங்களில் முஸ்லிம்களின் எண்ணிக்கையும் அதிகமாக இருக்க வேண்டும்.

அரசியலை வகுக்க கூட்டப்பட்ட அரசியல் நிர்ணய சபை மேலே சொன்ன மூன்று கொள்கைகளின் அடிப்படையிலேயே அரசியலை வகுக்க வேண்டும். அரசியல் நிர்ணய சபை மூன்று பிரிவுகளாக இயங்கும். முதல் பிரிவு இந்துக்கள் பெரும்பான்மையாக உள்ள மத்திய இந்தியாவில் உள்ள பிரதிநிதிகள் அடங்கியது. இரண்டாம் பிரிவு முஸ்லீம்கள் பெரும்பான்மையாக உள்ள வடமேற்கு எல்லை மாகாணம் சிந்து பஞ்சாப் மாகாணங்கள் உள்பட மேற்கு இந்தியாவில் உள்ள பிரதிநிதிகள் கொண்டது. மூன்றும் பிரிவில் வங்காளம் அஸ்ஸாம் மாகாணங்களின் பிரதிநிதிகள் இருப்பர். இந்தியா மூன்று துணைக் கூட்டாட்சிகளாகப் பிரிக்கப்படும். இதற்குத் தகுந்தபடி அரசியல் அமைப்பதற்காகவே இந்த மூன்று அரசியல் அமைப்புக் குழு இயங்கும்.

இத்திட்டத்தை நன்கு கவனித்தால் பாரதத்தை துண்டாட பிரிட்டன் துணிந்துவிட்டது, பாரதத்தில் உள்நாட்டுக் கலவரத்தையும், பொருளாதார நெருக்கடியையும் உண்டுபண்ண சதி செய்கின்றது என்பது நன்கு தெரியவரும். எதற்காக இத்தகைய அரசியல் அமைப்புக் குழு தேவை? தனிப்பட்ட மனிதனின், தனிப்பட்ட குடும்பத்தின், தனிப்பட்ட இனத்தின், தனிப்பட்ட மதத்தின் நலனுக்கும் ஆக்கத்திற்கும் கேடு ஏற்படாதவகையில் சூழ்நிலையை உருவாக்கும் அரசியல் நிர்ணய சட்டம் ஏற்

படுவதற்கு பிரிட்டன் முன்வரவில்லை என்பது குன்றின் மீது வைத்த விளக்கு.

"வாள் போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக

கேள் போல் பகைவர் தொடர்பு"

1946ஆம் ஆண்டு மே மாதம் 16ஆம் தேதி அறிவித்த பிரிட்டிஷ் அரசியல் சட்டம், சேக்ஸ்பியரும் மில்டனும். பேகனும் ரஸ்கினும், கீட்சும் ஷெல்லியும் பெர்னாட்ஷாவும் போற்றிக் கொண்டாடிய ஆங்கில மொழியில் மாறி, வெறி பிடித்த கொள்ளைக் கூட்டத்தினரின் ரத்தத்தில் தோய்ந்த அரசியல் சாசனமாக வெளிவந்ததை இந்திய தேசிய காங்கிரஸ் நிராகரித்துவிட்டது. பிரிட்டனிலும், அமெரிக்காவிலும் இவ்வாறுதான் சுதந்திரப் பிரகடனம் செய்தார்களா?

இந்தியாவின் வைஸ்ராயாக இருந்த வேவல், காங்கிரசு கட்சியும் முஸ்லிம் லீக் கட்சியும் அடங்கிய ஒரு தற்காலிக கூட்டாட்சி அரசாங்கம் ஏற்படுத்த திட்டம் இட்டார். இதன் மூலம் மந்திரி சபைக்கு அனுப்பவேண்டிய ஆட்களின் பட்டியலை அனுப்பும்படியும் ஒரு கட்சி நியமிக்கும் ஆட்களை மற்ற கட்சி ஆட்சேபிக்க உரிமையில்லை என்றும் வெளியிட்டார். ஜின்னா இந்த திட்டத்தை நிராகரித்தார் என்பது அரசியல் சூழ்ச்சியே அல்லாது வேறு ஒன்றும் இல்லை.

1946ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 12ஆம் தேதி பண்டித ஜவகர்லால் நேருவின் தலைமையில் மந்திரி சபை ஏற்பட்டது. ஜின்னா இதனை எதிர்த்து ஆகஸ்டு 16ஆம் தேதியை 'நேரடி நடவடிக்கை தினம்' என்று அறிவித்தார். கல்கத்தாவில் நான்கு நாட்கள் கலகம் நடந்தது. நூற்றுக்கணக்கான மக்கள் மாண்டனர், ஆயிரக்கணக்கானவர்கள் காயம் அடைந்தனர்.

1946ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் பண்டித நேரு இந்தியாவின் பிரதமர் ஆனார். ஜின்னா இதை ஒரு துக்க நாள் என்று அறிவித்தார். முஸ்லீம்களை கறுப்புக் கொடி பிடிக்கச் சொன்னார். மதப்பற்றுள்ள நீதியும் நேர்மை

யும் உள்ள முகமதியர் விருப்பு வெறுப்பு அற்று சிந்திக்க வேண்டும். இந்நிலையில் ஜின்னு என்பவர் முகமதியர் களுக்கு கொடிய துரோகம் செய்துவிட்டார் என்பது தெரியவரும். ஜின்னு முஸ்லீம்களை தூண்டிவிட்டார் என்று சொல்வதற்குப் பதில் காலிகளைத் தூண்டிவிட்டார் என்றுதான் சொல்ல வேண்டும். இதைவிட கொடிய நாட்டுத் துரோகம், மத துரோகம், சாதி துரோகம் வேறு ஒன்றும் இல்லை.

இந்நிலையில் தமிழ் நாட்டில் 1965ஆம் ஆண்டு ஜனவரி மாதம் இருபத்தாறும் தேதி திராவிட முன்னேற்றக் கழ கம் இந்திய குடி அரசு தினத்தை துக்கதினமாகக் கொண் டாடியது தமிழ் நாட்டின் நலனுக்கும் ஆக்கத்திற்கும் உழைக்கும் உழைக்க இருக்கும் அறிஞர்களும் தியாகி களும் மறக்க மாட்டார்கள்.

"உலகத்தார் உண்டு என்பது இல்என்பான்வையத்து
அலகையா வைக்கப்படும்"

"அரங்கின்றி வட்டாடியற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்"

இந்து முஸ்லிம் கலவரம் பம்பாய்,பஞ்சாப்,பீகார்,வங் காளம் முதலிய மாகாணங்களிலும் கடும் புயலாக மாறி யது. முஸ்லீம் லீக் தலைவர்கள் அரசியல் சட்ட நிர்ணய சபையில் கலந்துகொள்ள மறுத்து விட்டனர். முஸ்லீம் லீக் தனது கடமையை அல்லாவின் ஆணை எனச் செய்ய தவறிவிட்டது. ஆண்டவன் ஒருவன். அவன் "அல்லா" என்று அழைக்கப்படுகின்றான். அவனது ஞாபகச் சின் னம் மூன்றாம் பிறைச் சந்திரன் தமிழ் நாட்டில் உள்ள முக மதியர்கள் இதனை மறக்கின் அவர்களது செய்கை நாட கத்தில் நடிக்கும் வேஷம் என்றுதான் ஆகும். உன்னத மனித வாழ்க்கையின் மாண்பினை எடுத்துக்காட்டும் குரா னின் பொன்மொழிகளை வாழ்க்கையில் நடத்திக் காட்டு கின்றவர்களே உண்மையான முகமதியன் என்று கூற

முடியும். மேலும் நபிகள் நாயகம் காலம் வேறு. இன்றுள்ள குரானில் மனிதனை மனிதன் பழிக்கும் நிலையில் எழுதப்பட்டவை இருக்குமானால் அது நபிகள் நாயகத்தின் பெயரால் மதத்தின் பெயரால் இடையில் தோன்றிய சூது என்று கொள்ளவேண்டுமே அல்லாது அதனை எதற்காக ஏற்றுக்கொள்ள வேண்டும்? மனிதர்களில் மாணிக்கம் நபிகள் நாயகம்.

இந்தியாவில் உள்நாட்டுக் கலவரம் பரவிக் கொண்டிருக்கிறது. நெருப்பை அணைக்க மண்எண்ணெய் ஊற்றும் காரியத்தில் இந்தியாவின் வைஸ்ராய் வேவல் ஈடுபட்டார். மந்திரி சபையில் ஜின்னாவின் ஆட்களை நியமித்தார். அவர்களில் நான்கு பேர் முஸ்லீம்கள், ஒருவர் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர். வேறு ஒரு மதத்தைச் சேர்ந்தவரை ஜின்னாவின் கையாளாக ஏன் நியமிக்க வேண்டும். நாட்டில் உள்நாட்டு கலவரம் காட்டுத் தீ போன்று பரவவேண்டுமென்ற தீயநோக்கத்துடன் செய்த கொடுமை ஆகும். மந்திரி சபையில் பிளவு உண்டாக்கவேண்டும் என்ற வஞ்சகத்துடன் ஜின்னாவின் கை ஆட்கள் பண்டித நேருவின் மந்திரிசபையை ஆதரிக்கவில்லை.

"எற்றிற்கு உரியர் கயவர் ஒன்று உற்றக்கால்
விற்றற்கு உரியர் விரைந்து"

நெருப்புப் போல் பரவி வந்தது மதவெறி. கிழக்கு வங்காளத்தில் நவகாளி திப்ரா முதலிய இடங்களில் மத வெறியர்கள் இந்துக்களை மதமாறபலாத்காரம் செய்தனர். அவர்களைகொன்றுகுவித்தனர். இதனைக்கண்டு காந்தி அடிகள்மனம்நொந்தார்; நவகாளிக்குப் புறப்பட்டார்; கல்கத்தா நகரில் பாதிக்கப்பட்ட இடங்களைப் பார்வையிட்டார். ஆட்கள் நடமாட்டம் இல்லை. கடைகள் மூடப்பட்டிருந்தன. நெருப்புக்கு இரையான வீடுகள் காணப்பட்டன.

கங்கை பிரம புத்திரா நதிகளுக்கு இடையில் நவகாளி இருக்கிறது. நவகாளிக்குச் சென்று காந்தி அடிகள் செய்த

சேவைகள் போற்றும் தரமன்று. மதவெறியினுல் தூண்டப் பட்ட இந்த கலவரம் காலிகளினுலே ஏற்பட்டது ஆகும். தக்க இராணுவ நடவடிக்கை எடுத்திருந்தால் இதனை பெரிதும் கட்டுப்படுத்தி இருக்க முடியும். அத்துடன் மக் களுக்கு ஆயுதம் தாங்க உரிமை பறிக்கப்பட்டதால் மக் கள் காலிகளுக்கு இரையாக வேண்டி இருந்தது. இந்த கலவரத்தை மதத்தின் பால் கூறுவதற்கு இல்லை. காலி களின், கொள்ளை கொலை செய்வோரின், வெறி ஆட்டம் என்று தான் கூற வேண்டும். மதம் புனிதமானது. இந்து என்ருே, முகமதியன் என்ருே, கிருஸ்துவன் என்ருே, பௌத்தன் என்ருே, கூறுவது குணங்களுக்கு ரூபத்தை கற்பிக்கும் பொழுது தான். அதன் வழிபாடு வேறுபாட்டி ஞல்தான். ' உடலுக்குவெளிச்சத்தைக்கொடுப்பதுகண்ணி ஞல்தான். உனதுகண் ஒரேநோக்குடன் இருந்தால்உனது உடல்எல்லாம் ஒளி விடும் இல்லாவிட்டால் இருண்டு விடும்."(பைபிள்)

இந்தியாவைத் துண்டு போடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் எல்லாம் தயாராகி விட்டன. மூன்று துணைக் கூட்டாட்சிக்கு உரிய அரசியலை வகுக்க அரசியல் அமைப் புக் கூட்டங்கள் நடத்த காங்கிரசு முன் வரவில்லை. ஜின்ன வும் அரசியல் நிர்ணய சபையில் கலந்து கொள்ள மறுத்து விட்டார்.

சுதந்திர இந்தியாவில் அரசியல் சட்டத்தை எழுதும் பொழுது முஸ்லிம் லீக் சேர்ந்து கொள்ள மறுத்தால் இந்தியாவிற்கு எப்படி சுதந்திரம் கொடுக்க முடியும் என்று ஓர் ஆங்கில எழுத்தாளனின் கேள்வியாகும். எழுத் தாளர் எந்த நாட்டில் பிறந்தால் என்ன. எந்த மொழியில் எழுதினுல் என்ன? நாட்டில் அன்பும் அமைதியும் நீதியும் நேர்மையும் நிலை நாட்ட உழைக்க வேண்டும். ஆனுல் இந்த எழுத்தாளன் இந்த உண்மையை மறந்து புத்தகங் கள் எழுதி பல்லாயிரக்கணக்காகப் பணம் திரட்ட வேண் டும் என்ற ஒரு நேர்மையற்ற புத்தக வியாபாரி என்று தான் கூற வேண்டும்.

1947-ஆம் ஆண்டு மார்ச் மாதம் 20-ஆம் தேதி மவுன்ட் பேட்டன் இந்தியாவின் வைஸ்ராயாக புது டில்லி வந்து சேர்ந்தார். பிரிட்டிஷ் திட்டத்தை ஏற்றுக்கொள்ளா விட்டால் இந்தியாவில் தொடர்ந்து பிரிட்டிஷ் ஆட்சி நடத்தும் என்று பயமுறுத்தினர். பஞ்சாபும் வங்காளமும் கூறு போடுவதற்கு உடன் பட்டால் பிரிட்டிஷ் அரசாங்கம் பிரிவினை செய்ய முன் வரும். கடைசியில் காங்கிரசும் இதனை ஏற்றுக்கொண்டது.

1947-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் பதினைந்தாம் தேதி இந்தியா பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலிருந்து இரத்த வெள்ளத்திற்கு இடையே பிரிந்தது.

பாகிஸ்தான் பிரிவினை ஏற்பட்டதும் அங்கு மதவெறி உச்சக்கட்டத்தை அடைந்து விட்டது. பல மைல் நீளம் பல்லாயிரக்கணக்காக அகதிகள் மேற்கு பஞ்சாபிலிருந்தும் கிழக்கு வங்காளத்திலிருந்தும் இந்தியாவை நோக்கி ஓடி வரும் காட்சிகள் நெஞ்சை உருக்கும். மதவெறியர்களால் தாக்கப்பட்டு கொலை செய்யப்பட்டவர்கள், அங்கஈனப் படுத்தப்பட்டவர்கள், உடைமைகள் எல்லாம் இழந்தவர்கள் ஆயிரம் ஆயிரம். இதனால் தில்லி மாநகரம் மயானமாக காட்சி அளித்தது.

பாகிஸ்தான் பிரிந்து விட்டதே, ஏன் இந்த கொடிய சம்பவம் ஏற்பட்டது? பாகிஸ்தானில் உள்ள முஸ்லிம்கள் இதற்குப் பதில் சொல்லித்தான் ஆகவேண்டும். பாகிஸ்தானில் ஆட்சியைக் கைப்பற்றியவர்கள் இதற்குப்பதில் அல்லாவின் ஆணை மீது கூறித்தான் ஆகவேண்டும். பாகிஸ்தான் இராணுவம் உண்மையில் வீரமும் புத்திக் கூர்மையும் உடையதாய் இருந்திருந்தால் இத்தகைய தீய காரியங்கள் நடந்திருப்பதற்கு இல்லை. அவை கொள்ளை கொலை புரிய உதவியாக இருந்தது. நாட்டை காக்கவேண்டிய ராணுவம் நாட்டையே அழிக்கின்றது.

பாகிஸ்தானை உருவாக்கியது பிரிட்டனே அல்லாது ஜின்னு என்று கூறுவதற்கு இல்லை. பாகிஸ்தானை உரு

வாக்கியது புனித முகமதிய மதம் என்று கூறுவதற்குப் பதில் கொள்ளையும் கொலையும் நடக்க திட்டமிட்ட தீய சக்தி என்றே கூற வேண்டும். இந்திய சரித்திரத்தில் உலக சரித்திரத்தில் இக்கொடிய சம்பவம் அழியா இடம் பெற்று விட்டது என்பது மலை இலக்கு.

காந்தி அடிகள் இந்த சோக நிலையைக் கண்டு கண்ணீர் விட்டார். மனம் வருந்தினர். பல ஆண்டுகளாக நடத்திய சத்திய சோதனையினால் எழுந்த அகிம்சா போராட்டம் விழலுக்கு இறைத்த நீர் போன்று ஆனது பற்றி தேம்பித் தேம்பி அழுதார். அகதிகளின் பரிதாப நிலையைக் காண அவர் உடல் நடுங்கியது; நடக்கவும் முடியவில்லை நிலை குன்றி விட்டார். சோகமயமாக காட்சி அளிக்கும் தில்லி மாநகரம் காந்தி அடிகளின் உள்ளத்தை உருக்கி விட்டது.

"மும்மை சால் உலகுக்கு எல்லாம்
மூல மந்திரத்தை முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும்
பதத்தைத் தானே
இம்மையே எழுமை நோய்க்கு மருந்தினை
இராமன் என்னும்
செம்மை சேர் நாமம் தன்னை கண்களில்
தெரியக் கண்டார்."

இராம நாமமே அவருக்கு மூச்சினில் உறவாடிக் கொண்டிருந்தது. 1948-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முப்பதாம் தேதி மாலை நான்கு மணிக்கு தில்லியில் பிரார்த்தனை கூட்டத்திற்கு அவர் வந்துகொண்டிருந்தார் அவர் உட்காரும் மர மேடையை அடையும் நேரத்தில் சுடப்பட்டார். "ஹேராமா" என்று தாரக மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு அவரது ஆவி பிரிந்தது.

புது தில்லியை அடுத்த யமுனை நதிக்கரையில் காந்தியடிகளின் பூத உடல் சந்தனக் கட்டைகள் அடங்கிய சிதையில் கிடத்தப்பட்டு வெள்ளை கதர் துணியினால் மூடப்பட்டு இருந்தது. அவரது மூன்றாவது மகனாகிய ராம்தாஸ் சிதைக்குத் தீ மூட்டினார். எங்கும் மக்களின் சோக வெள்ளம் நிரம்பி இருந்தது. எங்கும் மக்கள் கண்ணீர் விட்டுக் கதறியழுதனர். காந்தியடிகளின் சடலம் சாம்பலாகிக் கொண்டிருந்தது. சிதையிலிருந்து நெருப்பு வான மண்டலத்தில் அலையும் உயிர் அணுக்களுடன் ஒன்றிக்கொண்டிருந்தது. காந்தியடிகள் தாய் நாட்டின் விடுதலைக்காகப் பிறந்தார், தன் உயிரையே தாய்நாட்டிற்காக காணிக்கை இட்டார். இத்தகைய பெருமை இப்புண்ணிய பூமியில் தோன்றிய மகரிஷிகளுக்கும் மகான்களுக்கும் நேதாஜி சுபாஸ் சந்திரபோஸிற்கும் கிடைக்கவில்லை. மகான் மகாத்மா காந்தியடிகளுக்குத்தான் கிடைத்தது. மகாத்மா காந்தி பரமாத்மாவில் கலந்துவிட்டார். அவர் அமர நிலையை அடைந்துவிட்டார்.

பல ஆண்டுகளுக்கு முன் நடந்த சம்பவம். பேராசிரியர் திரு. வி. கலியாண சுந்தரனார் திருநெல்வேலியில் பொருநை ஆற்றங்கரை குறுக்குத் துறை சுப்பிரமணிய சுவாமி கோவில் அருகில் ஒரு காங்கிரசு பொதுக்கூட்டத்தில் தலைமை தாங்கினார். "மகான்கள் அழிவில்லாதவர், அழிக்க முடியாதவர்கள். அவர்கள் தங்கள் விட்டகுறையைச் செய்து முடிக்க மீண்டும் பிறக்கின்றனர். உலக நாடுகளுக்கெல்லாம் தமிழ் நாடும், தெய்வத் தமிழ் மொழியும் அதி உன்னத நிலையில் இருக்கச் செய்ய காந்தியடிகள் மீண்டும் தமிழ்பாடும் தாமிர பரணி நதிக்கரையிலே பிறக்க வேண்டும். உருவத் தோற்றத்தில், நடை உடை

பாவனைக்ளில் அப்பெருந்தகை தமிழ் நாட்டினையே பிரதி பலிக்கின்றார்" என்று குறிப்பிட்டார். இந்து முஸ்லிம் ஒற்றுமைக்காக பல நாட்கள் காந்தியடிகள் உண்ணு விரதம் இருந்த காலம் அது. பேராசிரியர் செங்கல்பட்டு மாவட்டத்தில் பிறந்தவராயிருந்தும் தெய்வத் தமிழ் பற்றின் காரணமாக அவ்வாறு கூறுகின்றார், பேராசிரிய ரின்விசால புத்தியும் உன்னத நோக்கமும் இதனை பாலில் படுநெய் போல் விளக்குகின்றது.

பாரத நாட்டிலே உள்ள முக்கிய தலங்களில் திரு நெல்வேலி ஒன்று ஆகும். இங்கு ஆண்டவன் 'அகம் அன்னம் அகம் அன்னம்' என்று மக்களுக்கு முக்கிய உணவாகிய நெல்லுக்கு அப்பனாக நெல்லை யப்பராகக் காட்சி அளிக்கின்றான். அம்பாளின் பெயர் காந்திமதி. இத்தகைய பெருமைபடக்கூடிய தலம் பாரத நாட்டில் காண்பது அரிது. இதனால்தான் காவிரி பாயும் சோழ நாட்டைச் சேர்ந்த திருஞானசம்பந்தபிள்ளை யார் "திருநெல்வேலி வாழும் செல்வர் தாமே" என்று குறிப்பிடுகின்றார்.

பாரத நாட்டில் உறங்கிக்கிடந்த மக்களை தட்டி எழுப்பி புழுதியில் எறியப்பட்ட வீணையை எடுத்து சுத்தம் செய்து அதன் நரம்பினை முறுக்கேற்றி இனிய ஒலியை எழுப்புவது போல, ஊக்கமும் உள்வலியும் உண் மைப் பற்றும் உண்டாகச் செய்த மகான் மகாத்மா காந்தி அடிகள், நெல்லை மாநகரின் தமிழ் தெய்வம் சாந்திமதி யின் திருநாமத்தைப் பெற்று விளங்குவதால் பாரத நாட் டிலே இத்தலம் அதி உன்னத சரித்திர வாயிலாக எடுத் துக் காட்டுவதை பேராசிரியர் திரு. வி. கலியாணசுந்தர னார் தமது அகக் கண்ணால் கண்டு அகமகிழ்கின்றார்.

## காந்தி துறை

இங்கிலாந்தில் தேம்ஸ் நதிக்கரையில் 'வெஸ்ட்மினிஸ்டர் ஆபி' என்ற தேசிய ஞாபகச் சின்னம் இருக்கின்றது. இதற்குமேன்மையானதாக நெல்லை மாவட்டத்திற்கு எல்லை இல்லாப் புகழைத் தேடித் தந்த தியாகிகள், கவிஞர்கள் எழுத்தாளர்கள், விஞ்ஞானிகள், அருளாளர்கள், வள்ளல்கள் இவர்களின் ஞாபகச் சின்னமாக மகான் காந்தியடிகளின் பெயரால் பொருநை ஆற்றங்கரை குறுக்குத் துறை 'காந்தி துறை' ஆக, தேசிய ஞாபகச் சின்னமாக விளங்க, அதி உன்னத கட்டடம் எழுப்பப்பட்டது.

அன்று ஒரு நாள் மாலைப் பொழுது. கதிரவன் மேலைமலையில் மறைந்து கொண்டிருந்தான். வானவீதியில் உருக்கிய தங்க ஆறு ஓடுவது போலகதிரவனின் பொற்கிரணங்கள் காட்சி அளித்தன. தாமிரபரணி தண்ணிரும் பொன்மயமான காட்சியுடன் சலியாது ஓடிக் கொண்டிருக்கிறது. இனிய தென்றல் காற்று வீசிக் கொண்டிருக்கின்றது. வான வீதியில் பறவைகள் ஆனந்த மயமாகப் பறந்து கொண்டிருந்தன. எங்கு பார்த்தாலும் நெல் வயல்கள், நாளொருமேனியும்பொழுதொருவண்ணமுமாய் செல்வப் பிள்ளை போல் காட்சி அளிக்கின்றன. காந்தி துறை சுப்பிரமணிய சுவாமி கோவில் பூசை நடக்கின்றது. மணிகள் முழங்குகின்றன, பேரிகைகள் இடி ஓசையென ஒலிக்கின்றன, முருகா, முருகா, முருகா என பக்தர்களின் இதய ஒலி எங்கும் பிரதிபலிக்கின்றது. அர்ச்சனை தமிழ் பாட்டை ஓதுவார் பண்ணுடன் பாடுகின்றார்.

"செந்தமிழ் நாளும் ஓதிஉய்ந்திட ஞானம் ஊறு
செங்கனி வாயிலோர் சொல் அருள்வாயே
சிந்தையே தென்திசைத் தென்றல் வீசும் பொழில்
காந்தித்துறை செந்தமிழ் பெருமாளே"

இந்நேரத்தில், ஓடும் ஆற்றின் நீரின் மத்தியில் ஒரு கருங்கல் பாறையில் மகான் ஒருவர் "ஓடக் காண்பது தீம் புனல் வெள்ளம் ஒடுங்கக் காண்பது யோகியர் உள்ளம்" என உட்கார்ந்திருக்கிறார். ஓர் எழுத்தாளன் அப்பெருந் தகையின் முன் தோன்றி கரம் குவித்து வணங்கி தான் எழுதிய நூலின் கை எழுத்துப் பிரதியை அன்புடன் காணிக்கை இடுகின்றான். அத்தியாக தீபமும் அதனை அன்புடன் வாங்கி மௌனமாகப் படித்தார், ஆவேசத் துடன் படித்தார். கடைசியாக ஓர் கட்டம் வருகின்றது. அதைப் படிக்கின்றார்:

"பாகிஸ்தான் இராணுவம் இந்தியாவின்மீது படை எடுத்து ஜம்மு அருகே சாம்ப பகுதியில் இந்திய இராணு வத்துடன் பயங்கரப் போர் நடத்துகின்றது. ஜம்மு காஷ் மீருக்குள் 5000க்கு மேற்பட்ட குண்டர்களை அனுப்பி கொள்ளை, கொலை, தீவைத்தல் முதலிய கொடிய செய லில் இறங்கி இருக்கின்றது. பாகிஸ்தான் அமெரிக்க டாங்கிகளையும் ஜெட் போர் விமானங்களையும் நவீன ஆயு தங்களையும் உபயோகித்து வருகின்றது. பாகிஸ்தான் இராணுவத்திற்கு உதவியாக கம்யூனிஸ்டு சீனாவும் நவீன யுத்த தளவாடங்களுடன் வடஎல்லையில் மூன்று லட்சம் துருப்புகளுடன் நின்றுகொண்டிருக்கின்றது. அசுரசக்தி பெரிதா, தெய்வீக சக்தி பெரிதா என்பதனை நாம் காணப் போகின்றோம்.

பாகிஸ்தான் ஒரு முகமதிய நாடு என்று கூறுவதற்கு இல்லை. அங்கு ஜனநாயக முறையில் நிர்வாகம் ஏற்பட வில்லை. இராணுவ ஆட்சியே அங்கே நடக்கின்றது. அங்கு பல ஆண்டுகளுக்கு முன் சிறுபான்மையராக இருந்த இந் துக்களையும். சீக்கியர்களையும். பார்ஸிகளையும் கொள்ளை

அடித்தும், கொலை செய்தும் அவர்களின் உடைமை எல்லாம் கொள்ளை கொண்டு அவர்களை இந்திய மண்ணிற்கு துரத்தியது மறப்பதற்கு இல்லை.

இந்திய சுதந்திரப் போராட்டத்தில் தாயகத்தின் விடுதலைக்காகப் போராடிய 'எல்லை காந்தி' எனப் போற்றிக்கொண்டாடப்படும் கான் சகோதரர்கள் பாகிஸ்தான இராணுவத்தின் கொடுமைக்கு ஆளாயுள்ளனர். வட மேற்கு எல்லை மாகாணம் பிரிந்து பட்டானிஸ்தான் ஏற்படுத்த அங்கு போர் மூண்டுவிட்டது.

நபிகள் நாயகம் தோன்றிய அரேபிய நாட்டில் அரேபிய மக்கள் குடிஅரசு தோன்றி இருக்கின்றது. அங்கு மதத்தின்பால் அரசாங்கம் அமையவில்லை. பாரத நாட்டில் முகமதிய மதத்தின் பெயரால் பாகிஸ்தான் பிரிந்தது என்று சொல்வதற்கு இல்லை. பாகிஸ்தானில் உள்ள முகமதியர்களின் எண்ணிக்கைக்கு அதிகமாகவே இந்திய மண்ணில் முகமதிய மதத்தில் பற்றுள்ளவர்கள் இருக்கின்றனர். ஜம்மு காஷ்மீரில் முகமதிய மதத்தைச் சேர்ந்தவர்கள் அதிகமாக இருந்தாலும், மதத்தின்பால் முகமதியராகவும், இனத்தின்பால் இந்தியராகவும் சமஉரிமையும் சம வாய்ப்பும் பெற்றவராயும் இருக்கின்றனர். இப்பகுதிகள் காஷ்மீர் மன்னரின் கீழ் இருந்து வந்தவை.

இந்நிலையில் கடந்த 17 ஆண்டுகளாக பாரத நாட்டிற்கு கொடிய பாதகங்களை பாகிஸ்தான் இராணுவம் புரிந்து வருகின்றது. எண்ணற்றவர்கள் சுட்டுக்கொல்லப்படுகின்றனர். இதனை தடுக்க கோடிக்கணக்காக நாட்டின் பணம் வீண்விரையம் செய்யப்படுகின்றது. இதற்கு ஓர் முடிவுகட்ட வேண்டிய நிலை வந்துவிட்டது. பாகிஸ்தானை, பாகிஸ்தான் இராணுவ ஆட்சியிலிருந்து விடுதலை

செய்து, அங்கு குடிஅரசு ஆட்சியை ஏற்படுத்த வேண்டும் பாகிஸ்தான் இராணுவத்தை தீயவழியில் நடத்திச் செல்லும் துரோகிகளை தூக்கில் இடவேண்டும்."

கண்ணீர் மழமழ என்று மலைவீழ் அருவி என பெருக்கெடுக்க ஆரம்பித்துவிட்டது. கண்ணீர்த் துளிகள் புத்தகத்தின் வரிவடிவை மறைத்துவிட்டன. கால தேவனும் மறைந்துவிட்டான். திடீரெனஎழுந்துவந்துகாந்திதுறைஆலயத்திற்குள் புகுந்தார். எழுத்தாளனும் அப்பெருந்தகையைப் பின் தொடர்ந்தான். ஆனால் பார்க்க முடியவில்லை வெளியே வந்து பார்த்தான். ஒரு சிறுவன் படித்துறையில் உட்கார்ந்து கொண்டு ஓடும் ஆற்றுநீரில் தனதுகால்களை ஆட்டி ஓசை உண்டாக்கி பாடிக்கொண்டிருக்கிறான். இனிய கானம் அதோ கேட்கின்றது.

> "வாழ்க எம்மான் இவ்வையத்து நாட்டில் எல்லாம்
> தாழ்வுற்று வறுமை மிக்கு விடுதலை தவறிக்கெட்டு
> பாழ்பட்டு நின்றதாமோர் பாரத தேசம் தன்னை
> வாழ்விக்க வந்த மகான் காந்தி வாழ்க வாழ்கவே !"

இந்நேரத்தில் காந்தி துறை சுப்பிரமணிய சுவாமி கோவில் மூல விக்கிரகத்தில் இருந்த வேலாயுதம் மேலே கிளம்பி வடக்கே அதிவேகமாகச் செல்லலுற்றது. அதுவோ:

> "பார்முதிர் பனிக் கடல் கலங்க உள்புக்குச்
> சூர்முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்."

**முற்றும்**

